அநுஸம்தியப்பது. वाय्वादिभूतங்கள் நாலில் स्पर्शம் முதலாக उत्तरोत्तराधिक्यம் वैशेषिகரும் இசைந்தார்கள். (வர்கள்)

---

என்கிற பாட்டிற் பணித்தபடி அநுஸந்திக்க. பாட்டின் பொருளாவது—भूस्थितपञ्चगुणरूபமாகி நீரிலி ருக்கும் நான்கு குணமாகி, ப்ராணிகளுக்கு உயிரான படியாலே சிறப்புற்ற வாயுவின் இரு குணங்களாகி, ஆகாசத்திலிருக்கும் ஒரு குணமாகி யிருக்கும்போதே அந்தந்த குணங்களினும் அவற்றின் ஆதாரங்களான அசேதநங்களினும் விலக்ஷணமாகி நீர் நிற்கும் ப்ரகாரத்தில் உம்மை யார் அறிய சக்தராவர். क इत्था वेद यत्र सः। அந்தந்த குணமாகும் உம்மை अशब्दमस्पर्शमरूपमव्ययं तथाऽरसं नित्यमगन्धवच्च यत् என்று அக்குணங்களற்றவராகவும் கடோபநிஷத்துக் கூறும் என்றவாறு. எதில் என்னென்ன குணங் களென்று முன்னமே மொழிந்தோம். அந்தந்த குணமாகி என்றது குணங்களுக்குப் பரம்பரயா பர மாத்மாவுடன் அப்ருதக்ஸித்தி என்னும் ஸம்பந் தமிருப்பதாலே, रसोऽहमप्सु कौन्तेय...पुण्यो गन्धः पृथि-व्यांच என்றது போலாமிது. யுக்தியால் வஸ்துக்களின் நிலைமையை நிரூபிக்கும் தார்க்கிகர்களும் பெரும்பா லும் இதை யிசைந்தனர், அவர்கள் ஆகாசமொன்று க்கே சப்தகுணத்தை யிசைந்தனர். வாயு முதலான வற்றில் நேராக சப்தம் கிடையாது, ம்ருதங்கம் த்வனிக்கிறது, வேணுவின் நாதம் இத்யாதி ப்ரயோ கம் ம்ருதங்காதிகள் சேர்ந்த ஆகாசத்தில் சப்த முண்டாகிறபடியால் ; ஆகாசமிராமல் சப்தத்தை

(2) उत्तरोत्तरभूतங்களில் पूर्वपूर्वभूतसंसर्गத்தாலே उष्णं जल மென்னுமா போலே शब्दादिगुणங்கள் தோற்று கின்றனவென்று சிலர் சொல்லுவர்கள் (3) पूर्वपूर्वभूत तन्मात्रैகளோடே கூடின तन्मात्रैகளாலே பிறக்கையாலே गुणाधिक्यமென்றும் சொல்லுவர்கள் (4) करकैயில शैत्यம் போலே कारणद्रव्यயில் गुणம் कार्यद्रव्यயிலும்

---

யெங்கும் கூறவாகாமையால் ஆகாசத்திலுள்ள சப்தத்தை அதன் உபாதியான (விசேஷணமான) த்ரவ்யத்தில் ஏறிட்டது மாத்ரமென்றனர். ஆகிலும வாயு முதலான தரவ்யஙகளில வேதாநதிகள் அதை யிசைநது அத்துடன மற்ற நாலு குணஙகள் பூமியில், மணம நீங்கலாக மூன்று நீரில், ரஸமும நீங்க இரண்டு தீயில, ரூபமும நீங்க ஒன்று வாயுவில என்றனா இபபோது வானில் ஒனறு. மேனமேல ஒவ்வொனறு அதிகம் சேரும

இபபடி ஸிததாநதமிருகக வேறு பக்ஷஙகளு முண்டு. 2 சிலா பூமிககு மணம், நீருக்கு ரஸமென்ற வாறு ஒவ்வொரு குணமே. முன பூததகின் குணம இங்கே தெரிவது அநதநத பூதத்தின சேர்க்கை யால், ஜலம் உஷ்ணமாயிருககிறதென்றால் ஜலத்தில நேராக உஷ்ணகுணமில்லையே, அததுடன சேர்ந திருக்கும் தேசில் தானே யுளது, அது போலென்பர் 3 ஒன்றைவிட ஒனறுககு அதிக குணமுண்டு, அது அந்தநத தநமாதரமும் அநதநத பூதத்திற்குக காரணமாகையாலென்பர் பிறர். 4 மூலமான நீரிலிரு க்கும் சீதகுணம் அதன் கார்யமான ஆலாங்கட்டியி

நிறகிறதெனறும்கொள்ளுவர்கள் (சொல்லுவாகள்)
42 अपूर्वस्वभावोत्पत्तियாலே तत्त्वान्तरपरिगणனை யாறுலும் पञ्चीकृतभूतविकारங்கள் அவ்வோ भूतस्वभावங்களை விடா மையாலும் இவை எண்ணி முடியாதபடி இருக்கை யாலும் पृथिवीயளவிலே तत्त्वगणனை पर्यवसिககிறது

---

விருககுமா போலே நூலின நிறம் சீலையிலிருக்குமா போலே கார்யமும் காரணமுமொனறுவதாவிருப்ப தாகும்; உண்டாவதொன்றில்லை யெனபாருமுண்டு காரணகுணத்திற்கும் கார்யகுணததிறகும் வாசி யிராதவிடத்தில இதைக கூறலாமாயினும, வாயுவில் அநுஷ்ணசீதம, சுகலமாய் தேசில ஸபஷட भास्वर ரூபம், ஜலத்தில் அஸ்பஷ்டம்மான ரூபம், ஜலரஸத் திறகும் மண்ணின ரஸத்திறகும பேதமென்றவாறு காணுமிடத்திலே குணம் ஒனறெனனவொண்ணுது

42 ப்ருதிவி வரையில் இருபத்திறைகு தததுவ ங்களௌறு எண்ணிக்கையை முடிபபதென, இவை யெல்லாம தனிப்பட்டவை, இனி பஞ்சீகருதமான பூத ஙகள், பிறகு பாஞசபௌதிகஙகள் பல வகையிலென் றிவறறையும்கூட்ட வேண்டாவோ என்னில்—இவற் றில அநத ஐநது பூதஸ்வபாவம் விடபபடவில்லை அதாவது அநதநத பூதமுளதென்று அதுவே இது எனற ப்ரதயபிஜ்ஞை = ஐகயததோறறம் இவற்றி லுண்டு, வாயுவில வானமே இது என்றும், தீயில் வாயுவே இது என்றும் இபபடி ப்ரத்யபிஜ்ஞை வருவதில்லை. அது வராத தததுவங்களைத தனியாகப் பிரித்தது. மற்றவற்றைத் தனியாககவில்லை, மேலும்

43 पंचीकरणம் பண்ணுமிடத்து, 'व्योम्नोऽर्धभागाश्चत्वारो वायुतेजःपयोभुवाम्' इत्यादिகளிற்படியே தன் கூறி விஞ்சி யிருக்கையாலே 'वैशेष्यात्तु तद्वादस्तद्वादः' 'त्र्यात्मकत्वात्तु भूयस्त्वात्' என்கிறபடியே प्राचुर्यத்தாலே व्यवहारம்

---

பாஞ்சபௌதிகங்களின் கார்யவகைகள் எண்ணற் றவை. எண்ணமாட்டாமையைக் கொண்டும் பிரிவை உபேக்ஷித்ததாம்.

43 பஞ்சீக்ருதபூதமென்கிறதென்?. இப்போதே பூத ங்கள் ஐந்தாகத் தானே செய்யப்பட்டிருக்கிற தென்னில், ஒவ்வொரு பூதமும் இந்த ஐந்து பூதங் களாக்கப்பட்டதென்று பொருளாம். ஒவ்வொன்றும் ஐந்து பூதக்கலப்பாலாய் ஐந்து பூதங்களென்றபடி அது ஐந்து பூதங்களை முழுமையும் ஒன்றோடொன்று சேர்க்காமல் विभागம் பண்ணிப் பிரித்துச் சேர்ப்பதா லாகும். அவ் விபாகவ்யவஸ்தையும், ப்ருதிவியில் பாதிபாகம் ப்ருதிவியாயிருக்கும்; மற்றபாதி மற்ற நாலுபூதங்களின் நாலுஸமமான அம்சங்களென்றும். இப்படி ஒவ்வொன்றும் ஐந்துபூதம் கலந்ததாகும் இப்போது நமக்குக் காணப்படும் பூதமெல்லாம் இப்படி கலந்ததே. அப்போது மண்ணை ஜலம் தேஜஸ்ஸு வாயு வானமென்று கூறலாமே, ஜலத்தை யும் வெவ்வேறு பூதமாகக் கூறலாமே யென்றவாறு வினவவேண்டா, எல்லாம் கலந்திருந்தாலும் எந்த பூதத்தின் அம்சம் அதிகமோ, அதுதான் விரைவில் காணப்படும் அதைக் கொண்டுதான் பெயர் வழங்கு வதாம்—இதை ஸூத்ரகாரரும் சொன்னார் त्र्यात्मक-

நடக்கிறது. त्रिवृत्करणम् சொன்னவிடம் पञ्चीकरणादि களுக்கும் उपलक्षणम्. त्रिवृत्कृतान्यादिகளில் भूतान्तररूपम् संसर्गத்தாலே தோற்றுகிறதென்ற श्रुति சொன்ன न्यायத்தாலே आकाशத்தில் नीलत्वादिகளும், वायुவில் सुरभिशीतलत्वादिகளும், वह्निயில் शुक्लकृष्णत्वादिகளும், जलத்

---

त्वात्—ஒவ்வொன்றிலும் மூன்று பூதம் கலந்திருப்பதால் அவற்றில் ஒருபூதம் भूयस्त्वात् விஞ்சியிருப்பதால் விஞ்சிய பூதத்தின் பெயரால் வழங்குவதாமென்க. वैशेष्यात्तु तद्वादः. வைசேஷ்யாத் என்பதற்கு भूयस्त्वात् என்றதே பொருள். ஒரு பூதாம்சம் அதிகமாயிருப்பதால் तद्वादः அந்த பூதத்தின் பெயராலே சொல்வதாகும். அத்யாய முடிவைக் காட்டுவதற்காக तद्वादः என்னும் கடைப்பதம் இருதரம் கூறப்பெற்றது. தனியாக அதற்குப் பொருளில்லை. ப்ராசுர்யமாவது அதிகமாயிருக்கை. ஸூத்ரத்தில் மூன்றே பூதங்களைச் சொல்லியிருக்க பஞ்சீகரணம் சொல்வது கூடுமோ என்னில், எல்லாம் பஞ்சீக்ருதமே, ஆனால் ஐந்தில் வாயு வானங்களுக்கு ரூபமிராமையால் மற்றவற்றின் கலப்பே கண்ணுக்குத் தெரியுமாகையால் மூன்றைமட்டும் மகனும் சிஷ்யனுமான ச்வேதகேதுவுக்கு உத்தாலகமஹர்ஷி உபதேசித்தாரென்க. அக்னியில் சிவப்பு, வெண்மை, கருமைஎன்ற மூன்றும் குணங்கள் எரியும்போது தெரிகின்றன அவற்றில் இயற்கையிலுள்ளது சிவப்பு, ஜலக் கலப்பால் வெண்மையின் தோற்றம், மண்ணின் கலப்பால் கருமையின் தோற்றமெனக் கூறினார். இதுபோல் பிறவும்

தில் वर्णरसान्तरादिகளும், पृथिवियில் उष्णत्वादिகளும் पञ्चीकरणादिகளடியாக வந்தभूतान्तरसंसर्गததாலே தோற றுகிறனவென்னுமிடம் आगमोपपत्तिகளாலே அறிந்து கொள்வது

तन्मात्रैகளிலே पञ्चीकरणமாககி पञ्चीकरिதத अंशங களை आकाशादिகளென்று சிலா சொல்லுமது तत्त्व-परिगणனை பண்ணுகிற श्रुति स्मृति पुराणादिகளுககுச் சேராது

44 பயூதஙகளில் आकाशம் अवकाशप्रदानம் பண்ணு

---

காண்க वर्णरसान्तरादिகளுமஃசுகலம தவிர வேறி வர்ணங்களும மதுரம தவிர மறற ரஸஙகளும. சாஸத்ரபபடி பஞ்சீகரணம சொல்லியாயிற்று. தந மாதரைகளுககே பஞசீகரணம் பஞ்சீகரணத்திற் குப பிறகே பூதமென்ற பெயர் எனபது ப்ரமாண விருத்தம

44 அநதநத பூதததிற்கு உலகில் அனேக காாயம் அனுபவததிலுள்ளதே ஆகாசத்திறகிலலேயே அது எதற்கு அது சபதத்தை யுண்டுபண்ணுவதால பயன்பெறுமெனபதில்லே, எலலா பூதஙகளிலும் சப்தம் இசைநதவர் இவ்வாறு செல்லவாகாதே யெனில், ஆகாசத்தின காரியமாவது அவகாசம தருகையே அதாவது நாலு பூதஙகளில் ஒரு வஸ்துவுடன மறறொரு வஸ்துவைச் சேர்த்தால் இரண்டும ஒரே இடத்தைப் பிடித்திருககவாகாது; ஒன்றின் அருகே நெருங்கி மற்றொன்று இருக்கும அவ்வாறின்றி ஆகாசமுள்ளவிடம் வேறு பூதங்கள்

கையாவது स्पर्शवद्द्रव्यங்களுக்கு प्रतिहति பண்ணு தொழிகை. இது पूर्वेतरங்களுக்கும் तुल्यம்

45. आकाशமென்றொரு द्रव्यமில்லையென்றும், இது अतीन्द्रियமென்றும் இது नित्यनिरंशविभुவாயிருக்கிறதென்றும் चार्वाकबौद्धवैशेषिकादिகள் சொல்லுமது उप-

---

சேரலாம் அது இவற்றைத் தடுக்காது அதற்குக் காரணம், வேறு பூதங்களில் ஸ்பர்சம் என்ற குணம் உளது; இதற்கு இல்லையென்பதே அதனுல் தடையில்லை ஆகாயத்திற்கு முன்னுள ப்ரக்ருதிமஹதஹங்காராதிகளிலும் ஸ்பர்சமில்லையே யென்னில், அதனுல்தான் அவைகூட தடை செய்யா ஆகில் அவையே போதுமே ஆகாசமெதற்காகவென்னில், அனுபவஸித்தமான ஆகாசமே வேண்டா என்கிறவன் அவற்றை ஏன் இசைவான்—சாஸ்த்ரத்திலெனில்; அதே ஆகாசத்தையும் சொல்லியிருப்பதால் மறுக்க முடியாது.

45 இதன்மேல் கேள்வி-சுவருள்ளவிடத்தில் ஒருவன் புக முடிவதில்லை. அங்கேயும் ஆகாசமிருக்கின்றதே, தடுக்காமல் விடக்கூடாதா அது விட்டாலும் சுவர் தடுக்குமென்னில், அப்போது தடுக்கும் வஸ்து இல்லாமை வேண்டுமென்றதாயிற்று இதனுல்தான் आवरणाभावம் தவிர ஆகாசம் வேறில்லையென று சார்வாகனும் பௌத்தரும் சொல்வதென்னில் — இது அனுபவத்திற்கு இணங்காது. 'இங்கே பக்ஷி பறக்கிறது.' 'ஆங்கே முகில்கள் ஸஞ்சரிக்கின்றன' என்று ஆதாரமாக ஒன்று ப்ரத்யக்ஷமாகிறது. अभावம்

लम्भयुक्त्यागमविरुद्धம்

ஆதாரமாகுமா? அதனால் ஆகாசமென்றொரு த்ரவ்யம் உளதேயாம். தார்க்கிகர்கள் சப்தகாரணம் ஆகாசமெனக் கூறி, சப்தம் எக்காலத்திலும் உண்டாகிறபடியால் அது நித்யம், எங்கும் உண்டாகிறபடியால் அது விபு = எங்கும் பரவியது. அதனாலேயே அது அம்சங்கள் அவயவங்களில்லாதது என்கிறார்கள். ஆகாசத்தை விண்டுப் பல பாகமாகப் பிரிப்பதையும் அதன் உத்பத்தியையும் சாஸ்த்ரம் சொல்லியிருப்பதால் அது அதற்கு விருத்தமாகும். இனி ஆகாசத்தை யிசைந்தாலும்आवरणाभावத்தால் தடையின்றி ஸஞ்சாரமென்றே சொல்வது போதுமாயிருக்க ஆகாசத்தைக் காரணமாக்கவேண்டா என்னலாம்; அவ்வாறே யாகுக. வேறு பூதம் உள்ளவிடத்தில் வேறொன்று புகாதது போல் ஆகாசமுள்ளவிடத்திலும் வேறொன்று புகவாகாதென்கிற கேள்விக்குப் பரிஹாரமாக மற்ற பூதங்களைவிட அதற்குள்ள வாசியைச் சொல்வதற்காகவே இங்கே இப்பூதங்களில் இத்யாதி வாக்யமென்க. उपलम्भयुक्त्यागमविरुद्धம் = ஆகாசம் நீலம், ஆகாசத்தைக் காண்கிறேன் என்கிற ப்ரத்யக்ஷமே உபலம்பமாகும். आकाशம் த்ரவ்யம், இங்கு பக்ஷி பறக்கிறதென்று பக்ஷியென்ற த்ரவ்யத்திற்கு ஆதாரமாகத் தெரிவதால் என்பது யுக்தி. आवरणाभावம் பக்ஷிக்கு ஆதாரமாகமாட்டாது. மேலும் अभावமானது இல்லை என்று தோன்றும், எது எங்கே இல்லையென்ற கேள்வியிருப்பதால் अभावத்திற்கும் ஆதாரமொன்று வேண்டும். ஆக ஆவரணாபாவத்திற்கு இட

46 இத்தை सर्वेन्द्रियप्रत्यक्षवेद्यமென்று சிலர் சொல்லுமதுக்கு सर्वருடையவும் इन्द्रियप्रत्यक्षமென்று பொருள் கொள்ள प्राप्तம [illegible]ादिகள் நாலு भूतங்களும் स्पर्शनप्रत्यक्षங்கள் वायुவில் स्पर्शमात्रமே प्रत्यक्षம், द्रव्यमनुमेयம் என்னும் वैशेषिकருக்கு, तेजःप्रभृतिகளிலும் स्पर्शरूपादिगुणங்களே प्रत्यक्षங்களென்ன प्रसङ्गிக்கும்,

---

மாக ஒரு த்ரவ்யமிசையவேண்டுமென்பதும் யுக்தி ஆகும மாவன—ஆகாசத்திற்கு ஸ்ருஷ்டியையும் அவய வப பிரிவுகளையும் பணிக்கும் வேதாதிகள் ஆகாயம் கண்ணுல் காணப்படுமென்றிசைவோம்

46 சிலர் ஸர்வேந்திரியப்ரத்யக்ஷவிஷயமென்றனர். ஆனுல் எல்லா இந்திரியங்களாலும் அது அறிய யப்படவில்லை ஆகையால் அதற்கு எல்லா இந்திரி யங்களென்ற பொருளை விட்டு எல்லாருடைய இந்தி ரியத்திற்கு—கண்ணிற்கு ப்ரத்யக்ஷமென்றே பொரு ளாம் ஆகாயமே ப்ரத்யக்ஷமானபோது அதன் கார் யமான வாயுவும் ப்ரத்யக்ஷமாகட்டுமே என்னில். இஷ்டமே. காரணம் காணபபட்டால் கார்யமும் காணப்படவேண்டுமென்கிற நிர்ப்பந்தமில்லை. கண்ணுல் காணவில்லையாகிலும தவக் என்ற இந்திரி யத்தால் காற்றை வீசும்போது உணருகிறோம் காணு தரென்ற சில தார்க்கிகர்கள் இங்கே காற்று உணரப் படவில்லை – அதிலுள்ள ஸ்பர்சமென்னும் குணமே உணரபபடுகிறது, குணத்தினின்று த்ரவ்யத்திற்கு அனுமானம் என்கிறனர், ஏனோ இப பிரயாசை? கண் ணுல்கூட ரூபம்மட்டுமே காணப்படுகிறது; த்ரவ்

47. तमः प्रतीतियில் पार्थिवावयவங்களினுடைய நீலகுண-மாத்ரமே ப்ரகாசிக்கிறது என்பார்க்கும், தமஸ்ஸென்று ஒரு द्रव्यान्तरம் என்பார்க்கும், चाक्षुषप्रत्यक्षाभावदशैயிலே

---

யங்களுக்கு அனுமானமே என்று ஏன் கொள்ளலாகாது? கண்ணால் பரிமாணாதி குணங்களையும் காண்கிறோமே யெனினில், த்ரவ்ய ப்ரத்யக்ஷமில்லையென்று வாதிக்கலாமே.வாயுவிலும்பரிமாணாதிகள் ப்ரத்யக்ஷங்களென்னலாம். ஆக வாயு த்வக்குக்கு விஷயமாகும்.

47 த்ரவ்யம் ப்ரத்யக்ஷமாகாமல் குணம்மட்டும் ப்ரத்யக்ஷமாகலாமென்பதற்கு தமஸ்ஸை சிலர் த்ருஷ்டாந்தமாக்குகின்றனர். இருள் காணப்படுகிறது. அது என்ன. கரிய வஸ்து என்னவேண்டும். ப்ருதிவீ கரியதென்கிற வேதத்திற்கிணங்க ப்ருதிவியின் பாகங்களே தமஸ் என்றாலும் அந்த த்ரவ்யமின்னதென்று தெரியவில்லையே. ஆகையால் அங்கே நீல நிறம்மட்டும் ப்ரகாசிக்குமென்பர். இது உபலம்ப விருத்தம் =ப்ரத்யக்ஷ விருத்தமாகும். இருள் அகன்று போகிறதென்று ஸஞ்சாரமும் பாகம்பாகமாக த்ரவ்யமும் தெரிகின்றனவே. 'தமஸ்ஸு என்பது ப்ருதிவியில்சேராது. தார்க்கிகர்கள் சொன்ன ஒன்பது த்ரவ்யங்களுக்கும் மேற்பட்டது பத்தாவது த்ரவ்யம்' என்பர் மீமாம்ஸகர். நமது ஸித்தாந்தத்தில் ப்ரகிருதி பரிணாமத்திலே அதைச் சேர்க்கவேணும். ப்ரக்ருதி பரிணாமங்களிலொன்றிலும் சேராமற்போனால் ப்ரக்ருதியில் சேரவேண்டும். அதற்கு ரூபாதிகளில்லை 24 வதையும் விட்டு வேறென்றால் அப்ராமாணிகமாகும்.

नीलरूपस्मृतिप्रमोषமென்பார்க்கும் उपलम्भविरोध-कल्पना-गौरवादिदोषம் வரும்

---

ஆகையால் தமஸ்ஸு பார்த்திவமே இல்லையேல், கல்பநா கௌரவமாம் நயாயஸித்தாஞ்ஜனத்திலே ஸ்ரீபட்டபாதருடைய ஸூக்திஸந்தர்ப்பத்திலே, நீல ரூபஜ்ஞானமாய் ஸ்ம்ருதியின் சிதைவு தமஸ என்று ப்ராபாகரபக்ஷம் குறிககப்பட்டுள்ளது அதாவது கண்ணால் வரும் ப்ரத்யக்ஷத்திற்கு வெளிச்சம துணை. அதிலலாதபோது சாக்ஷுஷ ப்ரத்யக்ஷம (கண்மூல மான பரதயக்ஷம்) இல்லை அப்போது வரும் தமஸ் ஸின ப்ரத்யக்ஷம் சாக்ஷுஷமென்னவாகாது ஆகை யால் எபபோதோ நீலவஸ்து ப்ரத்யக்ஷம் வநதிருப் பதன்மூலமான அதன் ஸ்மரணம் பூர்த்தியாக வரா மல தரவ்யாம்சததை விட்டு நீலரூபாம்சத்தைமட்டும் கரஹிதது அரைகுறையாக உண்டாகிறது இந்த சிதைவான நினைவுக்கு स्मृतिप्रमोषமென்று பெயராம் என்பர் இதிலும் கல்பநா கௌரவம் இப்போது இருளின ஸஞ்சாரம முதலானவற்றை நிர்வஹிப்பது ச்ரமம் வேதம தேஜஸ்ஸைப போலே இருளையும் தரவ்யமாகக குறிததிருப்பதால் அது த்ரவ்யமே அஙகு உளதே எனனலாம் இல்லையேல ச்ருதிவிரோத முமாம் [மேகநாதாரிஸூரியும நயத்யுமணியில தமஸ்ஸு பருதிவியே யெனறார்] இஙகே— ஆகாயம நீலமாகத தெரிவதால ஆகாயத்திற்கு நீலரூபம் இசைய வேண்டாம வெகுதூரத்திலதானே ஆகா யம் நீலமாகத தோன்றுகிறது அதனால ஸூர்ய

48 இப்பூதங்கள் पञ्चीकरणादि प्रक्रियैயாலே சேர்ந்து, कर्मविपाकानुगुणமாக पुरुषभेदத்தாலும் कालभेदத்தாலும் भोग्य-भोगोपकरण-भोगस्थान-भोगायतनங்களாய்க் கொண்டு

---

ப்ரபை பரவுமிடம் கடந்து அப்பாலுள்ள ஆகாசத்தில் கண்பார்வை விழுவதால் அங்கே தமஸ்ஸே உள்ளதால் அதுதான் நீலம்; ஆகாயம் நீலமன்று என்று வாதிக்கலாம் அப்படியானாலும் அருகிலும் நீலரூபமின்றி ஆகாசம்மட்டும் ப்ரத்யக்ஷமாயிருப்பதை மறுப்பது தகாதென்றறிவிப்பதற்காக இங்கே ஆகாச ப்ரஸ்தாவதத்திலே தமஸ்ஸையும் கூட்டினதென்க. [எங்கும் எப்போதும் இருள் பரவியேயிருக்கும். இருந்தும் வெளிச்சத்தால் அதன் தர்சனமில்லை யென்பர் நயத்யுமணியில்.]

48 இப்படி பஞ்சீகரணம் நிரூபிக்கப்பெற்றது. இந்த பஞ்சீக்ருதமான பஞ்ச பூதங்களாலான பாஞ்சபௌதிக பதார்த்தங்கள் வ்யஷ்டிஸ்ருஷ்டியிலகப்பட்டவை. இவை போக்யம் போகோபகரணம் போகஸ்த்தானம், போகாயதனமென நான்குவகையாகும். அன்னபானாதிகள் போக்யங்கள். பாத்ராதிகள் போகோபகரணங்கள். லோகம், வீடு முதலானவை போகஸ்த்தானங்கள். அந்தந்த ஜீவனுடைய தேஹம் அவ்வவனுக்கு போகாயதனமாகும். இவை அவர்களின் பூர்வகர்ம, காலம் முதலானவற்றின் வேறுபாட்டால் பலவகைப்படுமென்பதைத். தேவ திர்யக் மனுஷ்ய ஸ்த்தாவர ரூபங்களாக நாலான ஸம்ஸாரிகளும் பிரித்தால் ஒவ்வொன்றிலும் உட்

परिणमிக்கும் 'पुद्गलமென்று एकजातीयद्रव्यवर्गமாய், இது, पार्थिवद्रव्यங்களில द्रवकठिनाद्यवस्थैகள் போலே अनियत மாக வருகிற पृथिव्यप्तेजोवायुरूपावस्थैகளை அடைகிறது' என்பார்க்கு कल्पनालाघवமுண்டாகிலும் त्रिगुणद्रव्य த்தினுடைய नियतक्रम भूतसृष्टि சொல்லுகிற नित्यनिर्दोष-

---

பிரிவுகள் எண்ணிககை யற்றிருப்பதால் அனுபவப் படி பார்த்துக் கொள்வது

இப்படி உலக ஸருஷடி பரமாண ஸித்தமா யிருகக, இதை விட்டு, 'பரமாணுக்கள் ப்ரதிவி, ஜலம். தேசு, வாயு என்று நாலுவகைப்பட்டுள்ளவை அவ வகையான பரமாணுககள் மேன்மேல் சேரச்சேர நான்கு மஹாபூதஙகள் உண்டாகின்றன அதன் பிறகு இநதரிய தேஹாதிகள் எனகிற தார் ககிகரின் பக்ஷம் ஆதரிக்கத் தககத்தன்று ஜைனர் கள் அந்தத் தார்க்கிக பக்ஷத்தைககாட்டிலும் இலகுவான மார்க்கம் மொழிவர் அதா வது—உலகில் ஓரேவிதமான பரமாணுககளே ஆதி யிலிருநதன ஒரு சாதியான வஸதுவே ஒரு ஸமயம கடினமாய் வேறு ஸமயத்தில த்ரவமாய் மாறுகினறதுபோல் ப்ரதிவியாகவும் ஜலமாகவும் தேசாகவும் வாயுவாகவும் அவை மாறுகிறன அநத பரமாணுககளுககு पुद्गलமென்று பெயர் புத்கலம் = ரமணீயமெனபர் पुद्गलम् = புஷடியும குறைவும - उपचयापचयங்கள் உள்ள வஸ்து எனனலுமாம

இந்தப் பக்ஷம் தாாககிகபக்ஷததைவிட லகுவாக லாம், ப்ரக்ருதி மஹத்து அஹஙகாரம ஸத்துவ ரஜஸ்

दुरपह्नवशास्त्रங்களாலே बाधம் கண்டுகொள்வது.

49 भोगायतनங்கள் देवादिभेदத்தாலே चतुर्विधங்களாயிருக்கும் नारकान्तமாகவும், स्थावरान्तமாகவும் எண்ணின இடம் स्थावर नारकங்களுக்கு उपलक्षणம். युक्त्याभासங்களாலே स्थावरங்களில் भोक्ताக்கள் இல்லை என்பார்க்கு जङ्गमத்திலும் देहातिरिक्तமான आत्मा இல்லை என்ன प्रसङ्गிக்கும்,

---

தமோகுணங்கள் அவற்றின் உட்பிரிவுகளென்று காணுமலிருக்கும் வஸ்துக்களின் கல்பனையில்லையாகையால் நம் மதத்தைவிட லகு என்னலாம் ஆதாரமற்றதால் அவர்கள் கல்பனைகளை ஆதரிக்கமுடியாது, அவர்கள் செய்யும் பேதாபேதவாதம்போலே அதுவும் புறக்கணிக்கத் தக்கதேயாகும். நமது சாஸ்த்ரங்கள் நித்யமானவை. உபதேசிக்கும் புருஷனிடமுள்ள தோஷமூலமானவையல்ல. இவற்றின் பெருமைகளை மறுக்க முடியாது.

49 நான்குவிதமான தேஹங்களாவன—தேவ திர்யக் மனுஷ்ய ஸ்த்தாவர ரூபமான பிரிவுகள் சிலர் தேவ திர்யக் மனுஷ்ய நாரக ரூபமாகப் பிரிப்பர். நரகத்தில் துக்கானுபவத்திற்காக ஏற்பட்ட தேஹங்கள் நாரகங்கள் அவை தேவாதி பிரிவுகளில் சேராவே ஒன்றில் ஒன்றைக் கூட்டியோ, பிரித்தோ எல்லா வகைகளையும் இசையவேண்டும். சிலர், 'ஸ்த்தாவரத்தை விடுவது தகும். அவற்றில் ஜீவன் இல்லை அவை தேஹங்களல்ல' என்பர். (ப்ரசஸ்தபாதரின் வைசேஷிகபாஷ்யத்திலே ஸ்தாவரம் விடப்பட்டிருப்

50 இப்படி भौतिकपर्यन्तकार्यங்கள் எல்லாம் पत्रताटङ्कादिन्यायததாலே अवस्थान्तरापन्नत्रिगुणद्रव्यம் தானே என்னு மிடம் सर्वप्रमाणानुगुणம் अवयवि विवर्तभिन्नत्वाद्विपक्ष-

---

பது. ஸ்ததாவரத்தை घटपटादिகளைபபோலாககி னர் இவர்) இது பரமாண விருத்தம் குதர்க்கத்திற் கு தொடஙகினல், ஜஙகமததிலும் உள்ளே ஆதமா இலலையென்னலாம்

50 கீழே போகயரூபஙகளான பாஞசபௌதிக பதாா த்தங்களைச சொனனேமே, இவைகள் வெவ்வேறு த்ர வ்யமா, காரண த்ரவ்யமான பூதங்களுக்கே இவவித மாறுதலகளா என்கிற விசாரததில் அவயவஙகளைக காட்டிலும வேறாக எங்குமே அவயவியாக நவநவ மாக தரவ்யஙகள் உண்டாகின்றன என்பா தார்க கிகர். அது பரஹ்மஸூததரத்திலே आरम्भणाधिकरणத திலே கண்டிக்கப்பட்டது ஆகையால் पत्रताटङ्कம், तन्तुपटம் எனறுறபோலே காரண த்ரவ்யமும் கார்ய தரவ்யமும ஒனறேயாகும் ஓலையைச் சுருளாக்கிக காதணியாக்குகின்றனா. அச்சுருள் ஓலையைக்காட்டி லும வேறனறு நூலையே குறுககும் நெடுக்குமாக மடககிச் சேர்த்தபோது அதே துணி என்னப்படு கிறது, ஏது வேறு தரவ்யம அதுபோல உண்மை யாய் மண்ணே உண்டை வடிவை விட்டு குடமென் னும் வடிவைப் பெறுகிறது இவ்வாறு பார்ககும் போது ஆதியிலிருந்த த்ரிகுணப்ரக்ருதியே மாறி மாறி, மஹதது, அஹஙகாரம், பூதம், பௌதிகமெல்லா மாயிற்று ஒரே த்ரவயம 24 விதங்களாகப

ங்கள் सर्वे प्रमाणविरुद्धங்கள் 'आविर्भावतिरोभावजन्मनाश-विकल्पवत्' इत्यादिகளுக்கும் अवस्थान्तरापत्तियிலே तात्पर्यம

---

பிரிவுற்றதென்று தேறும் ஒரே தரவ்யம் பலவித மான பரிணமங்களைப் பெறுகிறதென்றதாயிற்று

இந்தப் பரிணமங்கள் ஸமம் விஷமமென இரண்டு விதமாகும். மண் உண்டையாய் குடமாகும் போது அதே இது என்று தெரிவதால் ஸமபரிணம மாம் ஆகாசம் வாயுவாகும்; வாயு அகனியாகும, அரிசி புழுவாகும் गोमयம் (சாணம்) தேளாகும் என்றவிடங்களிலே அதே இது என்றறிவது அரிதா கையால் விஷம பரிணமம் இதை விவர்த்தமென போம். இதை யிசைய வேண்டும் இது தவிர சாங்க ராத்வைதிகள் வேறு விவர்த்தமும் வர்ணிக்கின றனர். அதாவது சைதந்யரூபமான ப்ரஹ்மத்திலே அவித யை யென்ற தோஷத்தினலே உலகம என்ற கல்ப பனை யுண்டாகிறது இந்த ஜடமான ப்ரபஞ்சம சைதந்யமான ப்ரஹ்மத்தின கார்யமென்னும போது விவர்த்தமாகுமென்றவாறு. இநதக கல்ப்பனை அப்ராமாணிகம்

ஸாங்க்யர் வேறுவிதமான ஸத்கார்யவாதம இசைந்தனர் அதாவது காரணகாலததில கார்ய வஸ்து எள்ளில் எண்ணெய் போல மறைந்திருநதது முன்னமே இருநத கார்யம் வெளியில தோனறு வதற்கே கர்த்தாக்களின் பிரயாசைகள்; வஸ்துவைச் செய்வதற்கல்ல எனறவாறு இது अभिव्यक्ति பக்ஷம். கார்யம் உத்பந்நமன்று, अभिव्यक्तम्—ஆமை சுருககி

51. த்ரிகுணத்ரவ்யத்திலே, ஸமுத்ரத்திலே புத்புதங்கள் போல வும், ஸர்வேச்வரனுக்கு க்ரீடாகந்துகங்கள் போலவும், அவன்

---

மடக்கிய கால்களை நீட்டினால் கால்கள் தெரிகின்றன. புதிதாகக் கால் உண்டாவதில்லையே. அது போ லென்பர். இதுவும் அநுபவத்திற்கு இசையாது. மற்றும் பக்ஷங்களை பாதத்துவாதிகாரத்தில் ஸேவக-ஜாலிகவர்ஹிணேத்யாதி வாக்ய ஸந்தர்ப்பத்திலே காண்க. அபிவ்யக்தி பக்ஷத்தை இசையாவிட்டால், ஆவிர்பாவ-திரோபாவ-ஜன்மநாஶவிகல்பவத் என்று பராசரர் எல்லாம் உண்டென்றது விரோதிக்காதோ. ஆவிர்ப்பாவ மாவது அபிவ்யக்தி; திரோபாவம் தோன்றுமை, மறைவு; ஜன்மமாவது உற்பத்தி; நாஶம் அழிவு என்றுரே என்னில்—உலகில் சிலர் ஆவிர்ப்பாவமென்கிறார்கள். தார்க்கிகர்கள் த்ரவ்யமே புதிதாக உண்டாகிறது அழிகிறது என்கிறார்கள். பலர் பலவிதமாகச் சொல் வதே விகல்பமெனப்படுகிறது.விவிதகல்பம்விகல்ப் பம்—இப்படி பல விகல்பங்களுக்கு இடமானதென் றார் இதனாலே எல்லாம் தம்மால் இசையப்பெற்ற தென்னலாமோ. த்ரவ்யம் ஒன்று. மண்ணே குடம், ஓடு, பொடி தூள் என்றவாறாக மாறுகிறதென்று மஹீ கடத்வம் கடதః கபாலிகா கபாலிகா(லத:?) சூர்ணரஜஸ்ததோ(அ)ணு: என்று இவர் நிரூபிக்கிறராகையால் வெவ்வேறு அவ ஸ்த்தை வருமென்பதிலேயே இவருக்கு நோக்கென்க.

51. இவ்வளவால் கடலில் குமிழ்கள் போலே ப்ரக் ருதியில் எம்பெருமான் ஸங்கல்ப மூலமாக அனேக ப்ரம்மாண்டங்கள் உண்டாகின்றனவென்றும் அவை

கைவழியாக விழுவ தெழுவதாகிற ब्रह्माण्डங்களினு டைய युगपत्. क्रमसृष्टिपक्षங்களில் यौगपद्यपक्षம் बहुप्रमाणा-நுகுணம் वेदसंप्रदायविच्छेदभயத்தாலே युगपत्सृष्टिप्रलयादி களையும், उपलम्भाभावमात्रத்தாலே मूलप्रकृति முதலான

---

அவனகைவழியாக விழுவதும எழுதுவதுமான விளையாட்டுப பநதுகள் போலாமெனறும் தெரிய லாகும் இநத ப்ரம்மாண்டஙகள் ஒரே ஸமயத்தில் உண்டாகி முடிவில் ஒரே காலத்தில் அழிகின்றனவா, ஒனறின பின ஒனருக வருமவையா எனறு விசாரி க்கும் போது, பல ஸருஷடி ப்ரளயங்கள் ப்ரஸித்த ங்களாகையாலே எல்லாம ஒரே ஸமயமென்ன வொண்ணுது ஒரே ஸமயததில் பல ப்ரமமாண்ட ங்களும் உணடு, இனி ஒவ்வொரு பரஹமாண்டத திற்கும மஹதாதி ஸமஷடிகள் தனித்தனியா ஒரே ஸமஷடியினினறு பல ப்ரம்மாண்டஙகள் உண் டாகுமா என்றே விசாரமாகும் रोमकूपेष्वन्यानि ब्रह्माण्डानि भ्रमन्ति ते எனறு ஒருகாலத்திலேயே விராட் ருபததில ஒவ்வொரு மயிர்ககாலுக்கு ஒரு பரம் மாண்டமாகச சுரைககொடியில் சுரைக்காய்கள் போல் தொஙகுமென்றதால், ஒரேகாலததில ஸமஷடி களும் லயிப்பதாக ச்ருதியிருப்பதால் அநேக பரம் மாண்டஙகள் ஒரேகாலத்தில இருககுமெனபது ஸ்வரஸமாகும்

மீமாமஸகாகள் ஸ்ருஷ்டி ப்ரளயங்களையே இசையார் இவ்வுலகம் இவ்வாறே எப்போது மிருககுமெனறும் பஞ்சபூதங்கள் முற்றிலும் அழிவது

सत्त्वங்களையும் இல்லை என்னும் निरीश्वरमीमांसकादिகள் वेदबहिष्कृதர்.

52 இவற்றை இசைந்து पञ्चविंशतितत्त्वमात्रத்தைப் பற்றின पक्षம் षड्विंश प्रतिपादकங்களான परत्वशब्दवाक्य ங்களாலே बाधितம ஆगमशास्त्रங்களில் சில இடங்களிலே

---

இடையாதெனறும கூறுவா எலலாம அழியுமாகில் பிறகு ஸர்வஸ்ருஷ்டி யார் செய்வது வேதபரசாரம் எப்படி வரும் உலகில வாழ்க்கை நடத்தும் முறை களைக் கற்பதெபபடி. ஆகையால் முனனோர் உபதேசி பதும் பினனோர் பின் பறறுவதுமாகவே எல்லாம் நீடிக்கும ஆகையாலதான வேதம எநநாளும் அழியா மலிருப்பதெனறு நிரூபணம செய்வர். இவாகள் மூல ப்ரகருதி ஈச்வரன இத்யாதிகளை இசைவதிலலை இவையெல்லாம் உண்டென்பதறகு ப்ரதயக்ஷ பர மாணமிலலை இருப்பதாக ப்ரதயக்ஷமிலலையாகை யாலே இல்லையெனபர் [उपलम्भाभावமாவது பரதயக்ஷ மில்லாமை] இநத நிரீச்வரமீமாம்ஸகா முனனோரா லும நிராகரிககப்பட்டார் யுகதிகளால் ஈச்வரனையும் ஸருஷ்டி பரளயாதிகளையும் ஸ்தாபிகக முடியா தெனறு ஸ்ரீபாஷ்யததிலே शास्त्रयोनित्वाधिकरणத்திலே சொன்னலும் சாஸ்தர ப்ரமாணததினல் எல்லாம் இசையவேண்டுமெனருர். வேதவிருத்தமாக வாதிக்கு மவர்கசு மீமாமஸகரெனற பெயரே தகாது

52 இவர்களைவிட ஸாங்கயர் சிறந்தவராவர்களா னலும் ஈச்வரன் என்ற 26ஆவது தததுவம வேத த்தில் ஓதப்பெற்றதை விட்டதால் அவர்கள் பக்ஷ

पञ्चविंशகன் பரமாத்மா என்றதற்குத் தாத்பர்யத்தை "अन्यश्च राजन्! स परस्तथाऽन्यः पञ्चविंशकः। तत्स्थत्वादनुपश्यन्ति ह्येक एवेति साधवः" என்று மஹர்ஷிதானே அருளிச்செய்தான்,

---

மும் தள்ளப்படும் பரமாத்மாவை 25ஆவது தத்துவமாகவேகூட ப்ரமாணம் கூறுகிறதேயென்னில், அதைக்கொண்டு ஜீவாத்மாவே பரமாத்மா என்னவொண்ணாது. இதற்கு, ஜீவனும் பரமாத்மாவும் வேறாயினும் எல்லா ஜீவர்களையும் போல் பரமாத்மாவையும் ஆத்மா என்று பொதுவிலே 25ஆவதாகச் சொல்வது கூடுமே; தார்க்கிகர் பொதுவாக ஆத்மாவில் சேர்க்கவில்லையா? பிறகு பிரித்துக் கொள்ளலாமே என்னலாம். ஆனாலும் இக் கேள்வியும் இதற்கு மறுமொழியும் வ்யாஸர் பாரதத்தில் அருளினார்—யாஜ்ஞவல்க்யர் ஜனகருக்கு உபதேசிக்கும் காலத்திலே, "அரசனே, அந்த பரமாத்மா வேறு, 25ஆவது தத்துவமான ஜீவன் வேறு, இப்படியிருக்க 25ஆவதாகவே ஒன்றாகவே சிலர் பார்க்கின்றதென் எனில், ப்ரகிருதியை விட்டு ஜீவன் போல் ஜீவாத்மாவில் பரமாத்மா சேராமல் ஜீவாத்மாவை விட்டிருப்பதில்லை அவனுக்கு அந்தர்யாமியாகவே யிருப்பதால். ஜீவாத்மாவை உன்னித் தெளிந்து த்யானம் செய்தால் பரமாத்மாவையும் பார்த்துவிடலாம், தனியுபதேசம் வேண்டா என்றும், ஜீவாத்மாவைச் சொல்லும் சொல் பரமாத்மாவையும் சேர்த்தே சொல்லுமென்றும் கருதி ஒன்றென்று பார்ப்பர்கள். இதன் கருத்தாவது 24 தத்து

ईश्वरனை षड्विंशன் என்றுதல் सप्तविंशன் என்றுதல் எண்ணவே प्राप्तமென்று श्रुतिதானே சொல்லிற்றிறே: प्रकृतिயில் तमोंशावस्थादिகளிலே ஒன்றைப் பிரிய எண்ணி सप्त-विंशகன் என்று எண்ணலாம். ईश्वरனுடைய अन्तर्यामिरूप

---

வங்களை விட்டொழித்து 25 ஆவது தத்துவத்தைக் கொள்ள வேண்டுமென்பதுபோல் ஜீவாத்மாவையும் விட்டொழித்து, பரமாத்மாவைமட்டும் பார்ப்பதென்பதில்லை. தேனும் பாலும் கலந்தாற்போல் இரண்டையும் சேர்த்தே மோக்ஷத்தில் அனுபவிக்க வேண்டியிருப்பதால் சுத்த ஜீவஸ்வருபத்தை விடலாகாதென்பதற்காக அவ்வாறு உபதேசமாகும். உண்மையில் இவன் வேறு, அவன் வேறுதான் என்றதாயிற்று.

மந்த்ரிகோப நிஷத்திலும், तं षड्विंशकमित्याहुः सप्तविंशमथापरे என்று 26 அல்லது 27வதாக பரமாத்மாவைச் சொல்லுவாரென உளது. 27ஆவது என்றல் கீழே 26 தத்துவங்கள் எப்படியென்னில், அவ்யக்தம் அக்ஷரம் தமஸ்ஸு என்ற மூன்று பிரிவை ஒன்றாக்கி 24 ஆவது தத்துவமாகக் கீழே கூறினோம், அங்கே, அவ்யக்தாக்ஷரமென்று ஒன்றாக்கி தமஸ்ஸைப் பிரித்து 25வதாக்கி, 26 ஜீவன், 27 ஈச்வரன் என்னலாம். ப்ராமாணிகமான வழியில் வேறு ஏதேனுமொருவிதமும் கூறலாம், 24 ப்ரக்ருதி, 25-காலம், 26 ஜீவன் 27 ஈச்வரன் என்று காலத்தைக் கூட்டலாம், அல்லது நித்ய விபூதியைக் கூட்டலாம். சிலர் ஈச்வரனையே அந்தர்யாமி, பரன் என இரண்டுவித

த்தைத்தனித்தெண்ணி सप्तविंशन् என்கிறதென்று சிலர் சொல்லுமதுக்கு ஔசித்யமில்லை. तैत्तिरीयादिகளில் सृष्टि-वाक्यங்களைக் கொண்டு षड्धातुवादம் சொல்லுவார்க்கு மற்றுள்ள श्रुत्यादिகள் विरोधिக்கும். तत्त्वங்களைச் சுருங்கச்சொன்ன இடங்களிலே ஏறச்சொன்ன இடங்களைக் கூட்டிக்கொள்ள प्राप्तம் 'क्षीरादिवत् तत इदं च

---

மாக்கி 26ம் 27மென்பர், ஒரே ப்ரக்ருதி 24தத்துவங்களாவதுபோல் ஒரே பரமாத்மாவுக்கு கார்ய காரணங்களாக வைத்து இரண்டு எண்ணிக்கையென்றும், இப்போது 25வது ஜீவன் என்பதில் எப்போதும மாறுதலில்லையென்றும் அவர் கருத்தாகலாம் ஸ்வரூபத்தில் விகார மற்ற பரமாத்மாவை இப்படி இரண்டாகப் பிரிப்பதைவிட வேறுவிதம் கூறுவதே பொருந்தும். ஸ்ரீதேவி 26, பகவான் 27 என்றும் கூறலாம். மேன்மேல் காரணமாய் ஸூக்ஷ்மமான வஸ்துக்களைக் கூறுவது பொருந்தும்.

சிலர் தைத்திரீயத்திலே ப்ரஹ்மத்தைச் சொல்லி तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः என்று ஸ்ருஷ்டியில் மட்டும் பஞ்சபூதங்களைச் சொல்லியிருப்பதால் வஸ்துக்கள் ஆறே ப்ரபஞ்சத்தின் காரணமென்பர். धातु = காரண வஸ்து. இது பல ச்ருதிவாக்யவிருத்தமாகும் சுருக்கிச் சொன்னாலும் இதரவாக்கியங்களைக் கொண்டு எல்லாம் கொள்வதே தகும். ஆகையால் ஒரு ஸ்ருஷ்டியில் நாலுமாத்திரம், ஒன்றில் ஆறுமாத்திரம், ஒன்றில் 25 ஆகும். வேறொன்றில் 26 ஆகும், 27 மாகுமென்று வாதிக்கலாகாது. இதனைப்

ततो दधीति क्षीरात् दधीति वदतां किन्नो (वदतामपि को) विशेष:' என்ருர்களிறே இங்ஙன் கொள்ளாதபோது सद्विद्यावाक्यத்தைக்கொண்டு सत्தும் तेजोऽबन्नங்களும் என்று चतुर्धातुवादं प्रसङ्गிக்கும். वैदिकர் ஒருவரும் இசையாத तत्वान्तरங்களைக் கூட்டி पट्विं शतत्वம்

புறக்கணித்து, தைததிரீய ஆனநதவல்லியில் ஆதமா வான ப்ரஹ்மத்தினின்று அடைவாக ஆகாசம் முதலான பஞ்சபூத ஸ்ருஷ்டியே சொல்லப்பட்டிருப் பதால், மஹதஹங்காராதிகளையு மிசையாமல ப்ர ஹ்மமும் பூதங்களுமான ஆறே உலகுககுக காரணஙக ளெனமுற் போன்ற சில அத்வைதிவாதாதிகள் கீழ்க் கூறிய வேதவிருத்தங்களாகும் சிலவற்றை மட்டும் சொல்லும் வாக்யங்களிலே அதிகத்தைச சொல்லும் வாக்யங்களைக் கூட்டிப் பொருள் சொள்க. 'பாலி னின்று முதலில் வருவது இது, இதனின்று இது, இதனின்று தயிர்' என்று உள்ளபடி விரித்துரைப்ப வர்கரும், 'பாலினின்று தயிர்' என்றே கூறுபவ ருக்கும் கருத்தொன்றே. இவர்களுக்காகப் பாலினி ன்று தயிரே நேராக வநதுவிடாது அதுபோல் ப்ரஹ்மத்தினின்று ஆகாசமெனமுல் மஹதஹஙகா ராதிகள் வாயிலாக எனறே பொருளாம் அதிகம் சேர்க்க விரும்பவில்லையாகில், சாநதோக்யததிலே ஸத்வித்யாவாகயத்திலே ஸத் என்ற ப்ரஹ்மததையும் அதனின்று அடைவாக தேஜஸ்ஸு நீர், பூமி எனற மூன்றையுமே சொன்னதால் நாலே காரணங்க ளென்று ஆகாசவாயுக்களையும் விடுவதாம். இனி

சொல்லும் पक्षம் आप्तपरिग्रहம் இல்லாமையாலே अनादरणीयம்.

53. दिक् என்றொரு नित्यविभु तत्त्वத்தை हैतुकர் கட்டினதும் तत्त्वपंक्तियில் परिसंख्यातமன்று. दिक्सृष्ट्यादि சொல்லும் இடம் स्वर्गान्तरिक्षादिसृष्टिवाक्यம் போலே अन्यथा-सिद्धமாகையாலே तत्त्वान्तरकल्पकமாகாது. आकाशம்

---

அதிகத்தைக் கூட்டுவதாகில், சைவரின் 36 தத்துவவாதமே கொள்ளலாகாதோ எனில் — அது வைதிகமன்றே ஆகையால் வேதம் வைதிக புராணேதிஹாஸ பாஞ்சராத்ரங்கள் என்றவற்றில் அதிகமாகச் சொன்னதையே சேர்க்கலாகும். आप्त-परिग्रहமாவது ப்ராமாணிகர் அங்கீகரிப்பது.

53 சைவபக்ஷம் தள்ளப்பட்டாலும் தார்க்கிகர் சொன்ன ஒன்பது த்ரவ்யங்களைவிட அதிகம் இசைவது அவசியமானாலும் அவர் சொன்ன திக்கு என்னும் தத்துவத்தை விடுவதென்? வேதத்திலும் திக்கின் ஸ்ருஷ்டி दिशः श्रोत्रात् என்று சொல்லப்பட்டிருக்கிறதே என்னில், हैतुकர் = ஹேதுவை யுக்தியையாதரிப்பவர் நித்யமாய் விபுவான (எங்கும் பரவியதான) திக்கு என்னும் த்ரவ்யத்தைக் கொண்டனர். கீழ்க்குறித்த தத்துவங்களில் அடக்கப்படாத தனித் தத்துவமன்று அது ஸ்வர்கலோகம், அந்தரிக்ஷ லோகம் என்றவாறு பலவும் சொல்லப்பட்டிருக்கின்றனவே, नाभ्या आसीदन्तरिक्षम्। शीर्ष्णो द्यौः समवर्तत। पद्भ्यां भूमिर्दिशः श्रोत्रात्। तथा लोकाँ अकल्पयन् இத்யாதி. ஆகையால் திக்கு லோகங்களில், அல்லது கீழ்க்

सूर्यगतिनिक्षेप‌भेदादि‌களாலே விभक्तமாய்க்கொண்டு दिक्कुக்களாகிறதென்றும், अहङ्कारம் இப்படியாகிறதென்றும் சிலர் சொல்லுவார்கள். இப்படி கொண்டாலும் இவை இரண்டுமில்லாத தேசங்களில் दूरत्व आसन्नत्व-पूर्वापरादि व्यवहारங்களெல்லாம் उचितोपाधिविशेषங்களாலே निर्वहिக்கவேணும். कालगतिसन्निधिயையும் प्रमाण-बलத்தாலே निरसिக்கலாம்

---

கூறிய தத்துவங்களிலடங்கியதேயாகும் ஸூர்யனுடைய கதியின தொடக்கம் முடிவு முதலானவற்றைக் கொண்டு, தொடங்கிய ஸூர்யகதிக்கு இடமான ஆகாசம் கிழக்கு, முடிவுக்கு இடமான ஆகாயம் மேற்கு. நாளுக்கு நாள் தாழ்ந்து ஸூர்யன் செலலும் ஆகாசம் தெற்கு, அதற்கு மாறானது வடக்கு என்றவாறு கூறி ஆகாயமே திக்கு என்று சிலர் கொள்வர் அப்போது சூர்யனும ஆகாசமுமிராமல் மஹதாதி ஸமஷ்டியுள்ளவிடத்திலே கிழக்கு மேற்கு வியவஹாரம் எப்படி? ஆகையால் 'தூரத்தில', ஸமீபத்தில்' இத்யாதி வ்யவஹாரம் போலே இந்த வியவஹாரமும் எங்கும் நடப்பதால் அங்கங்கு உள்ள வஸ்துக்களை ஒருவிதமாக திக்கு என்ற வியவஹாரத்திற்கு விஷயமாகக் கொள்ளவேண்டும் காலத்தைத் தனி த்ரவ்யமாகக் கொண்டாற் போல் திக்கையும் கொள்ளலாமே யெனனவேண்டா. ப்ரமாணவாக்யங்கள் அதைபபோல் இதைத் தனியாகச் சொல்லவில்லையே யென்க ப்ரதிபந்தியாவது—ஒன்றைக்காட்டி அதுபோலிருக்கட்டுமென்றோ அதுவும் வேண்டாமென்றோ செய்யும் எதிர்வாதம்.

54 காலமாவது क्षणादिपरार्धपर्यन्तावच्छेदத்தையுடைத்தாய் भूतभविष्यत्वर्तमान-ज्येष्ठकनिष्ठादि व्यवहारங்களுக்கு विशेषकारणமாயிருப்பதொரு द्रव्यம். नित्यமான காலத்தில் क्षणादिகளை சிலர் उपाधिகளாலே வந்த परिच्छेदங்களென்பர் 'कालं स पचते तत्र' इत्यादिகளாலே காலம் विकारियாய்த் தோற்றுகையால் क्षणादिகள் कालविका-

---

54 காலம் தனி த்ரவ்யமே. அதாவது—காலத்தின் உட்பிரிவுகளில் க்ஷணம் என்றுற் போல் எல்லா வற்றையும்விட நுட்பமான காலமுண்டு. அதை அதிக மாகப் பெருக்கினுல் வரிசையாக நாழிகை, நாள், மாதம் முதலான மேன்மேல் காலப்பிரிவுகளாம். முடிவான எண்ணிக்கை பரார்த்த(परार्ध)மென்பது. இவ்வளவு அவச்சேதம் = அவாந்தர பேதம் உடைய காலமிருப்பதால் தான் 'கடந்தது, வரப்போகிறது, இருக்கின்றது', 'மூத்தவன், இளையவன் என்றுற் போன்ற வியவஹாரங்கள் ஸித்திக்கின்றன.

சிலர்—இது நித்யமான த்ரவ்யம். நிர்விகார மென்று கூறி, க்ஷணம் முஹூர்த்தம் இத்யாதி வியவ ஹாரங்களை, தார்க்கிகர் க்ரியை விபாகம் என்றுற் போன்ற வஸ்துக்களைக் கொண்டு भागकल्पனை செய்து முதலில் க்ஷணமென்றதை நிரூபித்து அதனைப் பெருக்கி மேற்காலங்களைக் கூட்டுவதுபோல் நிர்வ ஹிக்கலாமென்பர். 'कालं स पचते तत्र' என்றவாக்யத்தில் பரமபதத்தில் பெருமான் காலத்தைத் தன் இஷ்டப்படி மாறச்செய்கிறுன், न कालस्तत्र वै प्रभुः, இங்கு எல்லாவற்றிற்கும் காரணமானகாலம் அங்கேவஸ்துக்

விசேஷங்களென்று சிலர் சொல்லுவர்கள்.

55 'एकाश्रयक्रियासंख्या कालः' என்கிற ந்யாயதத்த்வக்ரந்தத்துக்கும் कालोपाधिस्वरूपம் சொல்லுகையிலே तात्पर्यம்.

---

களின் உற்பத்திக்குக் காரணமாகிறதில்லை யென்ற தினின்று காலத்திற்குப் பரிணாமம் உண்டென்றேற் படுவதால், க்ஷணநிரூபமாக மாறுதல் உண்டென்க. ஆக ப்ரக்ருதியைப் போலே காலமும் பரிணாமங்களை உடையது, நுண்ணிய காலமான க்ஷணம் முதல் பெருங்காலமான परार्धம் வரையில் எத்தனை பிரிவுகள் உண்டோ, அத்தனையாகவும் காலம் பரிணமிக்குமென்பர் சிலர். க்ஷணமாக மட்டுமே பரிணமித்து வருகிறது; அந்த க்ஷணங்களை மேன்மேல்கூட்டி மற்ற காலங்களைக் கூறலாமென்பது இலகுவான பக்ஷம்.

55 இப்படி காலமென்பது தனி த்ரவ்யமாகில் ஸ்ரீமந்நாதமுனிகள் ந்யாயதத்துவமென்ற க்ரந்தத்திலே एकाश्रयक्रियासंख्या = ஓர் அதிகரண(இட)த்திலே உண்டாகும் பல க்ரியைகளின் எண்ணிக்கை ஒருவகையாயிருந்துகாலமெனப்படுகிறதென்றுஸங்க்யையென்ற குணத்தில்சேர்த்தது விரோதிக்குமென்ன வேண்டா. அங்கே காலமென்பதொன்றிருந்தாலும் உட்பிரிவுகளை கிரியைகளின் எண்ணிக்கையைக் கொண்டு கூறவேண்டியிருப்பதால் காலத்திற்கு உபாதியான-விசேஷணமான அதைக் காலமென்றது. உதாரணமாக ப்ராதக்காலம், ஸங்கவம், மத்யான்னம் என்ற பிரிவுகளை ஸூர்யனுடைய கதியின் எண்ணிக்கையைக் கொண்டு இத்தனை எண்ணிக்கை வரை

**जैनाधिकरणकालविषयभाष्य**மும் **कालनिराकरणपर**மனறெனனு மிடம **'रूपान्तरं तत् द्विज कालसंज्ञं' 'प्रकृतिपुरुषकालव्यक्तमुक्ता यदिच्छया' इत्यादिप्रमाणसंप्रदायग्रन्थ**ங்களையும், **भाष्य**ந்தன்னில் **वाक्यस्वारस्य**த்தையும் கொண்டறிநது கொள்வது.

---

யில் ப்ராதககாலம அதறகுமமல் இவ்வளவுவரையில ஸங்கவம், பிறகு மத்யான்னமென்றவாறு காண்க

ஆனல் **नैकस्मिन् असंभवात्** என்ற ஜைநாதிகரணததில் **ஸ்ரீபாஷ்யத்**திலே காலத்தைத தனியாகப பிரிததுக கூறியது தவறென்று ஜைனாகளை தூஷிததிருபப தால் அவருடைய கொள்கை காலம தனி த்ரவ்யமன் றென்பதேயாமென்னில், **रूपान्तरं तत् द्विज कालसंज्ञम्** பகவானுககு ப்ரக்ருதி முதலான உருவைப போல வேறோர் உருவம், மைத்ரேயரே, காலமென்ற பெய ருடையது' என்றாற் போன்ற ப்ரமாணத்திற்கும, ப்ரக்ருதி, ஜீவன், காலம், பரபஞ்சம், முக்தர் என்ற வஸ்துக்கள் எவனுடைய திருவுள்ளத்திற்கிணங்கி யிருக்கின்றனவோ என்ற ஆத்மஸித்தியில் ஆள வந்தாரின் ஸ்ரீஸூக்தி போனற ஸம்ப்ரதாய வாக்ய த்திற்குமிணஙகக கருததுரைகக வேண்டும் ஆகை யால் அநத பாஷ்யஸூகதி, காலததை இல்லையெனப தன்று ; அநத ஸூகதியையே ஊனறி நோக்கி ஸ்வாரஸ்யத்தைக் கண்டாலும இது தேறும், 'ஒன்றுககு விசேஷணமாகவே தோனறும் ஜாதி முதலானவறறிற்குத தனியாக ஸப்தபங்கியைக கூறாத ஜைநன, காலததிற்கு ஏன் அதைக் கூறுகிறான்; அதுவும் வஸ்துவுக்கு விசேஷணமாகவே எங்கும்

56 उपाधिपरंपरामात्रத்தைக் கொண்டு காலமென்று வேறு ஒரு तत्त्वமில்லை என்கிற बाह्यமத प्रत्यक्षानुगुणपरश्शता-नमन्वाक्यங்களாலே बाधितம उपलम्भததையும் आगमததையும் விட்டு उपपत्तिमात्रத்தாலே कल्पिப்பார்க்கிறே

---

தோன்றுகிறது தானே' என்கிறார் பாஷ்யத்தில் அத னல் காலமில்லை யென்று கிடைக்குமா, ஜாதி, அவஸ் த்தை என்றவை அததன வ்யக்தியைக்காட்டிலும வேறுவதுபோல காலமும வேறெனறே தெரியும 56 வேதபாஹ்யமாய் சிலா சொலவதாவது—கால மென்று ஒன்றைக் கொணடாலும அதன் உட்பிரி வைப் பிரித்துக் காண, உபாதிகளாக ஸூர்யகதி முத லானவற்றைக் கூறவேண்டுமே, அநத கதி முதலான வற்றிற்கே காலமெனறும் பெயர் எனபோம், எதற் குத் தனிக் காலமென்றவாறு நூற்றுக்கு மேலான ப்ரமாணவாக்யஙகள் இருக்கும போது இநத யுக்தி வாதத்தைக்கொண்டு காலதரவ்யத்தை மறுக்க லாகாது. இரண்டு பக்ஷங்கள் நேர்ந்தால் அவறறில் லகுபக்ஷம கொள்வது, குருவான பக்ஷத்தை விடுவ தெனற நிபநதனையும் ப்ரத்யக்ஷ ஸித்தவிஷயத்திலோ சப்தப்ரமாண ஸித்தத்திலோ இடம் பெறுது; யுக்தி யால் மட்டும முடிவு செய்யககூடும் பொருளிலே அது இடம் பெறும் கண்ணுல் ஒருவனுக்கு ஆறு விரல களைக் கண்ட பிறகு இது குருவானபடியால் இலகு வாக ஐநதுதான விரல்கள் என்னவாகுமா. ராவண னுக்குத தலைகள் பதது, பகவானுக்கு புஜஙகள் நான்கு என்று வசனம் கூறின பிறகு ஓரே தலை,

लाघवतर्कம் उत्तरமாவது. 57. 'अनादिर्भगवान् कालः' என்று सामानाधिकरण्यமும் अन्यपरம். 'नित्यं हि नास्ति जगति' इत्यादिகளைக்கொண்டு कालத்துக்கும் उत्पत्तिनाशங்கள் சொல்லும் पक्षம் अनाद्यनन्तत्ववचनத்தாலும், कालம்

---

இரண்டே புஜங்களென்று எதிர்க்கக்கூடுமா,

57. காலமென்று கூறப்படும் ஒரு த்ரவயமிருக்கட்டும். அது பகவானே. அநாதியாய் பகவானே காலமென்று விஷ்ணுபுராணம் கூறுமே என்னில், அங்கே எந்த வஸ்துவுக்கும் எம்பெருமான் அந்தர்யாமி' என்று சொல்லுகிற பராசரர், 'பகவான் காலத்திற்கும் அந்தர்யாமி' என்பதற்காக, 'பகவான் காலः என்றார். ஆகையால் ஸாமாநாதிகரண்யம் = அபேதமாகச் சொன்னது சரீராத்ம பாவத்திற்காக. இல்லையேல், अनादिः. नान्तोऽस्य द्विज विद्यते என்ற விசேஷணங்களைச் சொல்லவேண்டா—பகவான் என்றபோதே அவை யெல்லாம் ஸித்திக்குமே அதே பகவானாகில், காலமே ஸர்வஜ்ஞும் ஸத்யஸங்கல்ப்பமென்றெல்லாம் கூடக் கூற நேரும்.

சிலர்—காலத்திற்கும் ஆதியும் அந்தமும் கொள்ள வேண்டும், नित्यं हि नास्ति जगति भूतं स्थावरजङ्गमम् । ऋते तमेकं पुरुषं वासुदेवं सनातनम् என்கிற வாக்யத்திலே வாஸுதேவன் நீங்கலாக எல்லாம் அநித்யமென்று கூறியதாலென்பர். அந்த ச்லோகமானது ஸ்த்தாவர-ஜங்கமங்களான ப்ராணிகளை = அசேதநமான சரீரத்தோடு உள்ள சேதனர்களை அநித்யமென்றது. பரவாஸுதேவனும் அசேதநமான

ஓரு காலத்தில் இல்லையென்றால் ஸ்வவசநவிரோதம் வருகையாலும் நிரஸ்தம். ஆகமாந்தரங்களில் காலோத்பத்தி தோற்றுமிடம் பரிச்சிந்நகாலாதிபரம்.

58. லீலாவிபூதியில் காலம் உத்பத்தி — விநாசவத் தாய், நித்யவிபூதியில் நிப்ருத்யக்ரமமாக நித்யமாயிருக்கு மென்று சிலர் சொல்லுமது காலதூஷகவாதத்துக்கு

---

விக்ரஹம் கொண்ட சேதநனே யானாலும், அநித்ய னல்லன் என்கிறது காலப்ரஸ்தாவம் அதில் இல்லை இனி வாஸுதேவன் தவிர எல்லாமென்று சேதநா சேதநங்களை யெல்லாம் கொள்வதானாலும் காலத் தைக் கொள்ளலாகாது, காலம் அநித்யமென்பதன் பொருள் என்ன? காலம் ஒரு காலத்தில் இல்லை யென்று தான் கூறவேண்டும் அப்போதும் கால மிருப்பதை 'ஒரு காலத்தில்' என்று சொல்லிக்கொண் டே, காலமில்லை யென்னக்கூடுமோ ஆகையால காலமே யில்லாத காலம் சொல்லவொண்ணாது. ஆப்தர்கள் ஸத்யமே பேசுகிறவாகள் காலம் வரும் பார்க்கலாம், காலம் போய்விட்டதென்றெலலாம் கூறுகிறார்களே யெனனில்—அது வஸந்தகாலம், க்ரீஷ்மகாலம, நலல காலம் கெட்ட காலமென்று அளவிடப்பட்ட காலத்தைப் பற்றியதாகும்.

58 சிலர் காலம நித்யமென்பது நித்யவிபூதியி லுள்ள காலத்தைப்பற்ற, காலம் உண்டாம் அழியு மென்பது லீலாவிபூதிகாலத்தைப்பறறவாமென்பர். பரமாண வாக்யத்தில் இரண்டு காலங்கள் கூறபபட வில்லை. ஒரு காலத்தை நித்யமாகவும் அநித்யமாகவும்

प्रमा மிலலாமையாலும் ஒன்றே नित्यமுமாய் अनित्य முமாயிருககுமென்றால் अनेकान्तवादம் प्रसङ्गிககை யாலும், विभूतिभेदம் विरोधशமனமலலாமையாலும், लीलाविभूतियில் अहोरात्रविभागத்தையும் परव्योम த்தில अनपायप्रभान्वितனை नित्योदिताऽऽदित्यனலே

---

சொல்ல வியலாது விருததமான தர்மங்களைக கூட்டுகின்றவர் அநேகாநதவாதிகள்—பேதாபேத வாதிகளென்ற ஜைநர்களே. तद्देशविशिष्ट காலம் நித்யம். एतद्देश विशिष्ट காலம் அநிதயம் என்று தேச பேதததாலே நிதயாநித்ய விபாகம கூடுமென்பது தகாது அப்போது தேசம ஒனறு நித்யம், ஒன்று அநித்யமெனறே தேறும். காலததில் விருத்தமான இரண்டு தர்மஙகள சேரா ஆகையால் விபூதியின வேறுபாட்டைக கொண்டு விரோத பரிஹாரம செய்ய முடியாது ஆகில் இந்த விபூதியில்காலம் அநித்யம்; அங கே காலம நித்யம்எனறவரின் கருததென்னவெனில், இஙகே பகல இரவு என்றவாறு காலம் மாறுகிறது அங்கே அநத பேதமில்லாமல் ஒரே பகலாகிற தெனற கருத்தாம் அங்கே சூரியனே யில்லையே, பகலெஙகே வருமெனனில், அஙகுத்தான் சிறந்த ஸூர்யனிருக்கிறான், இநத சூர்யனுக்குச் சில ஸமயத் தில் ப்ரபை குறையும், அவனுக்கு ப்ரபை அநபாயம், விட்டுப்பிரியாது, பரவாமலிராது, அவன் நிதயோதி தன் வாஸுதேவன். பரரூபத்திலே சாந்தோதித நித்யோதித பேதமுள்ளதாக तत्त्वत्रयचुलकादिகளிலே அருளிச்செய்தது காண்க இங்கே, अनपायप्रभान्वितனை

ஒரு பகலான நடப்பையும் பற்ற சொன்ன தாமத்தனை. அங்கும் चेतनाचेतनங்களினுடைய व्यापार परम्परैக்கு कालाधीन पौर्वापर्यம் கொள்ள வேண்டுகை யாலே 'न कालस्तत्र वै प्रभुः', 'कालमुहूर्तादिमयश्च कालो न यद्विभूतेः परिणामहेतुः', 'दिव्यं स्थानमजरं चाप्रमेयम्' इत्यादिகளுக்கு कालविशेष नियत जरादिகள் வராதபடி परमपद

---

नित्योदितமாகலே' என்ற சொற்கள் இப்ரபந்த மங்கள ச்லோகத்தை நினைப்பூட்டும் உண்மையில் பகலெனபதற்குப் பொருள் ஞானமே, அங்கே எந்த விதத்திலும் அஞானமிலலையென்பதில் நோக்கு.

இபபடி காலப்பிரிவில்லை யென்றபோது அங்கே காலமேயில்லையென்றே கொள்ளலாகாதோ என்னில், ஆகாது அங்கே காணும வியாபாரங்களில், அவை முன்னே, இவை பினனே, அவன் முன்னே முக்தன், இவன் பின்னே முக்தன் என்றவாறு பௌர்வாபர்ய வ்யவஹாரமுண்டு முன் பின் எனற சொற்கள் காலத்தைதக கொள்ளாமல் பொருள் பெறு ஆகை யால் காலம் எங்கும் உளதே ஆனாலும், அஙகே காலததிறகு ப்ரபுத்வமில்லை யென்றும, கலை முஹூர்த்தம யாமம் மாஸம் என்ற பரிணாம ப்ரசுரமான காலம் எந்த நித்ய விபூதியின் கார்யங்களுககுக காரணமாகாதோ' 'திவ்யமான ஸத்தானததிறகு ஜரை=மூப்பு, நாளளவில் பலவீனம இல்லை. அள வற்றது அது' எனறவையெல்லாம காலமேயில்லை யென்று கூறு. காலம் இருநதும அதற்கு அதீனமாக, அத்தைதக காரணமாக்கிக் கொண்டு கார்யம் உண்டாவ

விசேஷமே அங்குள்ள விகாரங்களுக்கு நியாமகமென்கை யிலே தாத்பர்யம் உக்தப்ரகாரந்தன்னாலே பரமபதத்திலே காலமில்லை என்னும் பக்ஷமும் கழியும்

59 காலத்துக்கு விபுத்வம் கொண்டால் ஈச்வரனுக்கு ஸர்வவ்யாப்தி கூடும்படி என்? அன்யதரகர்மாதிகள் இல்லா மையாலே விபுத்வயத்துக்கு அன்யோன்ய ஸம்யோகம் கூடாதிறே

---

தில்லை. கார்யம் வேண்டுமாயிருந்து காலத்தை அதற்காக எதிர்பார்பதில்லை; பரமாத்மாவின் ஸங்கல்ப்மமே கார்யங்களுக்குக் காரணமென்றே கூறும் விகாரங்களுக்கு நியாமகம் = கார்யங்களின் விய வஸத்தைக்குக் காரணம் இதனாலேயே அங்கும் காலம் உளதெனறே தேறும

59 இனி வினவலாம்—இப்படி எங்கும் காலம் உண்டானால விபுவாகுமே அப்போது விபுவான காலத்தோடு விபுவான ஈச்வரனுக்கு ஸம்யோக மில்லையாம். ஸம்யோகமென்பது க்ரியையினால உண்டாககப்படும், இரண்டு த்ரவ்யஙகளிலும க்ரியை யுண்டானல் ஸம்யோகம் வருவதும் உண்டு மல்லர் களின் போரில் அதைக் காண்க ஏதேனுமொன்றில் க்ரியை யுண்டானாலும் போதும் பறவைக்கும் பர்வத த்திற்கு ஸம்யோகமானது பறவை பறந்து வநத தால்தானே ஏற்படுகிறது. இதே அன்யதரகர்ம-இரண்டி லொன்றுககு மட்டுமிருக்கும் க்ரியை இஙகே காலம் ஈச்வரன் இரண்டுமே விபுவானால் ஒன்றிலும் க்ரியை உண்டாக மாட்டாதாகையால் ஸம்யோகமே யிராது இதுவேயில்லை யென்றால், காலவ்யாப்தி இராது

எனனில் — इन्द्रियादिகளான காரணங்களன்றிக்கே இருககும் ईश्वरனுக்கு ज्ञानादिகளைத தாஙகள் कल्पिக்கக கட்டளையிலே विभुககளுககும அन्योन्यसंयोग कल्पिக்க லாம் विशेषித்து ईश्वरனை व्यापகங்கள் எனறும், மற்றுள்ளவை யெல்லாம் இவனுககு व्याप्यங்கள்

---

அதில்லை யென்றால் ஸர்வவ்யாப்தி ஈசவரனுக்கு இல்லையாம். ஈச்வரன் வ்யாபகன, எல்லாம் வ்யாப்யம் என்றனரே நாம் இசைவது வ்யாபகன் என்றால் அதிகமான இடத்தில் பரவினவன் எனற தாம்; காலம் விபு என்றால் காலத்தை விட அதிக மான விடம் ஏது என்று. கேண்மின

இரண்டும் விபுவானாலும் அவற்றிறகு ஸம்யோகம் உண்டு. ஸமயோகம அவ்விரண்டுக்கும் எப்போதுமேயிருக்கலாமே. முன்னே இராமல் பின்னே உண்டாகும் ஸமயோகத்திறகே கரியை யென்ற காரணம் வேண்டும் இப்படி நித்யமான ஸம்யோகஙகூட உண்டோ என்னில், ஈச்வரனுக்கு ஞானம, இச்சை, பரயதனம மூன்றும் நிதயமென்கிறார்களே தார்க்கிகர்கள் எங்கேயாவது ஜ்ஞானம் இந்திரியம் முதலான காரணமின்றி இருக்கப் பார்க்கிறோமா நிதயமான ஞாநாதிகளுககு இநதிரியாதிகள் வேண்டா என்று சொல்லுகிறார்களே, அது போல் இதுவுமெனக. ஆனாலும் வியாபகன் எனறு சொல்லவாகாதே எனனில, அதிக தேசததிலிருப்பது வியாபகம், குறைநதது வ்யாப்யமெனற பொருள் கொள்ளவேணடா. இரண்டும் ஒரே விதமாகப் பரந்

என்றும் சொல்லுமது नियन्तृ नियाम्यभावादिகளாக கூட்டிச் சொல்லுகிறது. ईश्वरன் ஈ வித்திலும் अन्तर्बहि

திருந்தாலும், நியமிக்கும் சக்தியோடு பரந்திருப்பதால் ஈச்வரன் வியாபகன், அந்த சக்தியிராமையால் காலம் வ்யாப்யமென்க. வ்யாப்தியைமட்டும் சொன்ன விடத்தில் இப்படி நிர்வாஹம் கொண்டாலும், अन्तर्बहिश्च तत् सर्वं व्याप्य नारायणः स्थितः என்றது சேராதே; எல்லா வஸ்துவிலுமவ்யாப்தியுண்டு உள்ளும் வெளியுமாக என்று அதன் பொருள் வெளியாவது அந்த வஸ்துவில்லாத இடம் உள்ளாவது அந்த வஸ்து இருக்குமிடம் காலம் விபுவாகில் காலத்திற்கு बहिर्भाव எப்படி என்னில்—இங்கே ஸர்வம் என்பது விபுவாகாமல் சிறிய பரிமாணமுள்ள வஸ்துவெல்லாம் என்ற பொருளதாகும் இந்த வாக்யத்தைக் கொண்டு விபுவான வஸ்துவையும் சிறிதாக்க முடியாது. संभवद्विषयத்திலே = எதெதற்கு உள் வெளி இரண்டு ஸம்பவிக்குமோ அதது விஷயத்திலே மட்டுமென்றபடி இனி வினு—अन्तः बहिः என்ற சொற்களுக்கு உட்புறம் வெளிப்புறம் என்ற பொருள் கூறினுலென்ன ஒவ்வொரு வஸ்துவிலும் உள்பாகத்திலும் மேல்பாகத்திலும் பரவியிருக்கிருனென்னலாமே விடை—அப்போதும் காலத்தை இங்குக் கொள்ளலாகாது. அது நிரவயவமான வஸ்துவாகையால் உட்பாகம் வெளிபாகமென்ற அவயவங்களில்லையே, ஜீவாத்மாவையும் கொள்ளவாகாது, அவன் நிரவயவன் என்று கீதாபாஷ்யம் பட்டர்

व्याप्तனென்ற ஶ்ருதிகளு संभवद्विषयத்திலே तात्पर्यம் இங்ஙனலலாதபோது ईश्वरன் தன்னுடைய धर्मभूतज्ञान बहिर्व्याप्तिஐக प्रसङ्गिக்கும் ஆகையால் अकालकाल शुद्ध सत्त्व विभूतियிலும் कालसद्भावததுக்கு विरोधமில்லை

60. शुद्ध सत्त्वமாவது रजस्तमोरहितமாய் विलक्षणसत्त्व-

---

ஸூகதி முதலான க்ரநதஙகளில் ஸ்பஷடம். ஜீவாத்மாவைக் கொள்ள வேண்டாவே என்னில், அப்போது य आत्मनि तिष्ठन् आत्मनोऽन्तरः என்று ஆதமாவுக்கு உள்ளும் வெளியும் இருப்பதாகக் கூறியது சேராது அந்தந்த ஆத்மாவுள்ள இடமும் அதது இல்லாத இடமுமென்ருல் பொருத்தும. ஆகையால் இதற்கு மிணஙக இந்தப் பொருளே தகும். ஒரு வஸ்து விடாமல் எல்லாவற்றிற்கும அபபாலும் இருககிருன் என்றே சொல்ல வேண்டுமென்ருல், சொல்லலாகாது. அப்போது முகதர் நித்யரென்ற ஜீவர்களுடைய தர்மபூதஞானம் பரவாத விடத்திலும் பரமாத்ம ஸ்வரூபம் உளது என்றதாகும். அப்படியாஞல் அவர்கள் பரமாத்மாவின் ஒரு பாகத்தை அறியவில்லையெனறதாகும் ஆறுலெனனவெனில, सर्वं ह पश्यः पश्यति என்ற ஸர்வபதம விரோதிக்கும மேலும் ஈச்வரனும அஜ்ஞனுவான் அவனுடைய தர்மபூதஞானததிறகும் அப்பால் அவன் ஸ்வரூபத்தை யிசையவேண்டுமே ஆகையால் பஹிர்வ்யாப்தி யானது விபுக்கள் தவிர மற்றவற்றிற்கேயாகும். காலம் விபுவே. பரமபதததிலும் அதுவுண்டு.

நித்யவிபூதி—இது சுதத ஸத்துவமெனப்படும்

गुणाश्रयமாயிருப்பதொரு द्रव्यம் இதில் सत्त्वम
बन्धकसुखसङ्गहेतுவாகாது, இத்த்ரவ்யம் रक्षा - शिक्षाधि-
कृतனான स्वातन्त्र्यமுடைய स्वरूप रूप गुण विभूति चोर-
कारागृहமான லீலாவிபூதி போலன்றிககே, कर्मोपाधिक
शरीரத்தைவிட்டு दया तत्फलविशेष योगத்தாலே उपायोपेय
सू லன निरुपाधिकशरीरियைப் பெற்றவர்களுக்கு

---

கலப்பற்ற ஸததுவகுணமுடையது सत्त्वं सुखे सञ्जयति பநதஹேதுவான சிற்றின்ப ஸுகப்பற்றை யுணடு பண்ணுமென்பது அசுதத ஸததுவகுண விஷய மாகும. இநத நித்யவிபூதித்ரவ்யத்திற்கும் லீலா விபூதியான ப்ரக்ருதிககும வெகு வாசியுண்டு ஸ்வாமி யாய் ஸ்வதநத்ரனை ஈச்வரன லீலாவிபூதியில் ப்ரஜைகளின் கர்மஙகளுக்குத தக்கவாறு ரக்ஷை, சிக்ஷையெல்லாம் நடத்துவான். இஙகுள்ள ஸமஸாரி களில கள்ளர்கள் அதிகம் ப்ரஹ்மஸ்வரூபமே யிலலை யெனபவர், குணமில்லை; அவன நிர்குணனென்பவர். இநத விபூதிகளெலலாம் பொய்யெனபவர், இருந தாலும் இவை அவனுடையவை யலல என்பவர் இவர்கள் எல்லாரும் ஒருவிததத்தில் கள்ளர்களே இவர்களுக்குச் சிறைக்கூடமாகும் இபரகருதி இதில் சிக்ஷை நடக்கும். சிறையிலடைத்தவனையும் ஆஹாரம் அளித்து ரக்ஷிப்பதுண்டு. நிதயவிபூதியைப பெறுகினறவரோவெனறுல் காமவச்யராகாமல் இதை விட்டுச் சென்றவர். அவனது தயைககும் அனுக்ரஹத்திற்கும் பூர்ணபாத்ரமானவர். அவனு டைய ஸ்வரூப ரூபகுணவிபூதிகளை நன்கு அறிநது

तदैश्वर्यस्वाराज्यस्थानமாயிருக்கும் இத்தை अपरिच्छेद्य स्वरूपस्वभावமென்றது[1](தை?) 'தமஸஸ்ஸுக்குமேல்' என்றதுக்கு विरोधம் வாராதபடி निर्वहिக்கலா(வா?)ம்

6 अण्डத்திற்குப் புறம்பே லோகங்கள் இல்லையென்றும், मूलप्रकृतियினுடைய प्रथम विकारமான सूक्ष्म प्रदेश विशेषமே परमपदமென்றும் சொல்லும் पक्षங்கள் तमःपरस्तादित्युक्ति

---

ஸந்தோஷித்து, அவனது கைங்கர்யங்களிலே என்றும ஈடுபட்டு பெரிய ஸாம்ராஜ்யம் பெற்றதாகப் பெருமைப்படுகிறவர். இந்த நித்யவிபூதியானது ப்ரக்ருதி மண்டலத்திற்கு மேலே மட்டுமிருப்பதால், விபுவாகாது, ஆகில் 'अपरिच्छेद्यस्वरूपस्वभावம்' என இதின் உருவங்கூட அளவற்றதென்று கத்யத்திலே அருளிச்செய்தது என்னில், கீழ்ப்புறம் ப்ரக்ருதியினலை அளவுற்றதானாலும் மேற்புறத்தில் பக்கங்களில் எங்கும் பரவி முடிவின்றி யிருப்பதாலென்க [1 என்றது என்ற பாடமானல், நிர்வஹிக்கவாம் என்றிருக்கும்.]

61 சிலர் நித்யவிபூதியை परमव्योम என்று சாஸ்த்ரம சொல்வதால் வெறும் ஆகாசமே அது. அதில் லோகங்கள் இருக்கமாட்டா. ப்ரஹ்மாண்டத்தினுள் தானே லோகங்கள் ப்ருஹதாரண்யகத்தில் கார்கிப்ரச்னத்திலே நான்முகன் லோகத்திற்கு மேலுள்ள லோகத்தைக் கேட்கும் போது, தகாத கேள்வி இது என்று யாஜ்ஞவல்க்யர் கார்க்கியை பயமுறுத்தினரே என்பர், யாதவப்ரகாசர், பரமபதமென்பது ப்ரக்ருதியின் விகாரமான அக்ஷரமென்ற தத்துவமே யாகும், அதற்கும் அக்ஷர

बलத்தாலும் இத்தை विशदीகரிக்கிற शास्त्रங்களாலும் निरस्तங்கள், अप्राकृतदेशविशेषமுண்டானாலும் அங்கு सावयवமாயிருக்கிற विग्रह मण्टपादिகளுக்கு नित्यत्वं சொன்னவிடம देवர்களுக்கு अमरत्वம் சொன்னதைப் போலவும் पृथिव्यन्तरिक्षங்களுக்கு अमृतत्वம் சொன்னதைப்போலவும்

---

மென்ற பெயர் உளதே யென்றார் இதெல்லாம் ச்ருதிவாக்யங்களை முழுமையும் ஆராயாமற சொன்னதாகும் கௌஷீதகி ப்ராஹ்மணத்தில் பர்யங்கவித்யை, சாந்தோக்யத்தில் தஹரவித்யையின் மேல்பாகம், முண்டகோபநிஷந்மந்த்ரங்கள் இவற்றை யெல்லாம் கவனிக்க வேண்டும், तमसः परस्तात् என்றிருக்கும்போது அது தமஸென்ற லீலாவிபூதியிலொரு புறமெனறு எங்ஙனே சொல்லலாகும், ஸுபாலோபநிஷத்திலும் காண்க. பாரதாதி வசனங்களும் பலவுண்டு.

இப்படி ப்ரக்ருதிக்கு மேற்பட்ட இடம்—அப்ராக்ருத வஸ்துவென்றாலும், அது நிரவயவமாய் ஸூக்ஷ்மமாய் நித்யமெனலாமாகிலும் அங்கே விமானகோபுரமண்டபாதிகளும ஆத்மாக்களுக்கு இருக்கும் விக்ரஹாதிகளும் (மூர்த்தி முதலானவையும ஸாவயவங்களாகையால் உத்பத்தி, விநாசம் இரண்டும் உள்ளனவே யாகுமே 'நித்ய ஸிததே ததாகாரே' என்றது விரைவில் அழியாது என்ற கருத்தினுலென்னலாமே தேவதைகள் அமரர்கள் என்னப்படுகிறார்களே. वायुश्चान्तरिक्षचैतदमृतम् என்று இரு பூதங்களுக்கு அழிவில்லாமை ஓதப்பட்டிருக்கிறதே.

चिरकालस्थापित्वपरமாமித்தனேயன்றே என்னில; देशादि களுக்குப் போல் இவற்றிற்கு विशेषित்து उत्पत्ति लयवाद्மிலலாமையாலும், 'तद्धाक्षरं सनातनम्' 'सदा हि तस्मिन्निवसामि देवाः' 'नित्यं नित्याकृतिधरं' 'नित्य सिद्धे तदाकारे' 'स्थानत्रयो नित्य लोकस्थ.' इत्यादिகளாலே विशेषித்து नित्यत्वம் சொல்லுகையாலும, आगमविरुद्ध மாக अनुमानம் சொல்லில் अतिप्रसङ्गம் வருகையாலும்

---

வெகுகாலமிருப்பதைக கொண்டு தானே அவ்வாறு சொல்வது, அதுபோலாகுக என்பர் இங்கு த்ருஷ டாநதங்கள் சரியல்ல. தேவர்களுக்கும பூதங் களுககும் அழிவு வேறு வாக்யஙகளில் கூறப்பட் டிருப்பதாலே அங்கே முக்கியமான பொருளே விடுகிறோம். இஙகே ஏன் விடவேண்டும் இவற் றிற்கு உற்பத்தியோ, லயமோ சொல்லப்பட வில்லையே ஸாவயவமாயிற்றே யென்னில், ஆகில் என்? வசனஙகளால் நிதயத்வம் அறியப்பட்டிருக்க, அதற்கு மாறுக யுகதி தகாது வசனஙகளாவன-'ராமா! நீர் முனனதுபோலன்றி சாசவதமாய் நன்கு ப்ரகாசி க்குப ஸ்ததானத்திறகு நேரில்எழுநதருளலாம்;',தேவ தைகளே நான் அஙகே எப்போதும் நிலேதது வாஸம் செய்கிறேன', 'தானும் நித்யமாய் நிதயமான திருமேனியையுமுடைய பரமாத்மாவை!', 'என்றுமிரு ககும் அவனது திருமேனி', 'நித்யமான உலகிலிருக்கு மவனே தயானம செய்வது' என்றுற்போனறவை, வசனவிருக்தமாக அனுமானம் சொலவதாலுல். யானதோல் அசுத்தமானது தோலானபடியால், பர

परमपदத்தில் नित्यமாய்ச் சொன்னவை नित्यங்களாகலாம். नित्यप्राचुर्यத்தாலே नित्यविभूति व्यपदेशम् அதில் 62 औपाधिकमसिद्धமன்றிக்கே स्वभाव नियतமான शब्दादि गुण-क्रमத்தாலே आकाशादिविभागमुपपन्नम्. अप्राकृत पञ्चभूतங்

---

மாத்மா கர்மவச்யன் ஆத்மாவானபடியால் என்றெல்லாம் கற்ப்பிக்க நேரும். அதிப்ரஸங்கமாவது—வரம்பை மீறி வேறிடத்திற்குமாகை, இதனுல் பரமபதத்தில் எல்லாமே நித்யமென்னலாகாது நித்யமாகச் சொல்லப்பட்டவை மட்டும் நித்யமாகும். அநித்யங்கள் அளவற்றன அங்கும் உண்டு. அநித்யமும் உண்டாகில் நித்யவிபூதி என்ற பெயரென்? த்ரவ்யம் நித்யமென்னில், ப்ரக்ருதி த்ரவ்யமாகிற விபூதியும் நித்யந்தானே யென்னில், அங்கே ஸாவயவங்களாயிருந்தும் நித்யமாக வஸ்துக்கள் நிறைந்திருப்பதால் அந்த வியவஹாரமாம்

2 அங்குள்ள பஞ்சபூதங்களும் நித்யமாகில் பூதலக்ஷணமே சொல்லப்படமாட்டாதே, அததன் காரணத்தைக் கூறி அதினின்று உண்டானதென்றுன்றே லக்ஷணம் கூறுகிறேம். சப்ததந்மாத்ரத்தினின்று உண்டாவது ஆகாசம்என்றவாறென்னில்,சப்தகுணம் மட்டுமுள்ளது ஆகாசம், சப்தம் ஸ்பர்சமிரண்டுமுள்ளது வாயு,ரூபத்துடன் மூன்றுள்ளதுதேஜஸ்ஸு, ரஸத்துடன் நாலு உடையதுநீர், மணத்துடன் ஐந்து பெற்றது மண் என்று லக்ஷணம் கொள்க. ஆகையால் அங்கே ஆகாசாதிவிபாகம் அவற்றின் உத்பத்தியில் கர்மத்தினுலல்ல.

களாய் पञ्चशक्तिகள் என்னும் பேராயிருக்கையாலே भगवद्विग्रहादिகளை पञ्चोपनिषत्प्रतिपाद्यங்களென்றும पञ्च-शक्तिमयஙகள் என்றும் சொல்லுகிறது இப்படியே இத்த்ரவ்யம் षाड्गुण्यप्रकाशोपयोगादिகளாலே षाड्गुण्यमय மென்றும், अनुकूल स्वभावतैயாலே आनन्दमयமென்றும், अत्यर्थभोग्यமாய்க்கொண்டு प्राप्यமாகையாலே परमपद மென்றும் சொல்லுகிறதாகையாலே இப் பாசுரங்

---

பகவானுடைய விகரஹத்தை பஞ்சோபநிஷந் மயம், பஞ்சசக்திமயமென்கிறார்களே. மயம் என்ற சொல்லுக்கு விகாரந்தானே பொருள் என்னில், அப்ராக்ருத பஞ்சபூதங்கள் பஞ்சோபநிஷத்தென்னப் பட்ட ஐந்து மந்த்ரங்களால் சொல்லப்படும் அந்த பூதஙகளுக்கு பஞ்சசக்திகளென்றும் பெயர் மய எனபதற்கு விகாரம் பொருளலல, ப்ரசுரமென்பது பொருள். சிலர் ஷாட்குண்ய விக்ரஹம் ஆனந்தமய விக்ரஹமென்ற வசனஙகளைக்கொண்டு ஞான சக்த் யாதி பரமாத்மகுணங்களையும் ஆனந்தத்தையும். திருமேனிக்கும் இசைகிறாகள் அது பொருநதாது, ஆறு குணஙகளின தோறறம் திருமேனியைக காணும் போது, அதனுல ஷாட்குண்ய விகரஹமென்பது. திரு மேனி யானது ஸவபாவததில் மிகவும் அனுகூலமா யிருபபதாலே ஆனநதமயமென்கிறது , ஆனநதமய னுடன் ஐகயத்தாலல்ல. किं नात्मका भगवतो व्यक्तिः இத் யாதியைக கொண்டு, सा किं त्वमेव तत्र वेत्ति वितर्कडोलाम् என றவாறு ஸமசயப்படலாம் உண்மையில வேறே, பகவானைப் பரமபதமென்றுஞ் சொல்வதால அவனே

களில் अप्रामाणिकतया कொண்டு अर्थान्तरங்களை கல்பிப்பார்க்கு அவகாசமில்லை.

**தீவகை மாற்றியன்றோர் தேரிலாரணம் பாடிய நம் தேவகி சீர்மகனாய் திறப்பாவருள சூடிய நாம்**

---

பரமபத மாகவுமிருக்கிறானென்பர் அதுவும் தவறு பரமபதம்என்பதற்கு உயர்ந்த ப்ராப்யவஸ்து என்றே பொருள் இச் சொற்களுக்கு வேறு பொருள் இங்கே பொருந்தா என்க பரமாத்ம ஸ்வரூபமே விசரஹ மாயும் வைகுண்டமாயும் இருசகிறதென்ற வாதம் உசிசமல்ல ஆகையால் சுத்தமேயாகும் ஆக அசித்து க்கள் மூன்று.

நமது ஸம்ப்ரதாயத்திற்கிணங்க மூன்று அசித்தத்துவங்கள் இங்கே அறிவிக்கப்பெற்றன என்று நிகமிக்கிறார் தீவகை என்ற பாட்டால்— அன்று= போரிலிழிந்து நின்றபோது ஓர் தேரில்= தான் ஸாரதியாயிருந்த ஒப்பற்ற அர்ஜுனன் தேரிலே தீவகை — தர்மாதர்மங்களைத் தெளியாமல் பெரிய தர்மத்தைக் கைவிடுகையாம் கெட்ட வகையை, மாற்றி—தவறென்று கூறி, ஆரணம் பாடிய—உப நிஷத்தை கீதையாக்கின, நம—நமது, தேவகிசீர் மகனார், தேவகியாரின் சிறந்த புதல்வனான கண்ண னின், திறம்பா—சலியாததான அருள்—தயையை, சூடிய—தலையால் கொண்டாடுகின்ற, நாம்= சேதநா சேதநேசவரர்கள் என்ற மூன்று தத்துவங்கள் போலே, ப்ரக்ருதி, காலம், பரமபதமென்கிற மூன் றை–महाभूतान्यहंकारः, कालोऽस्मि लोकक्षयकृत , स्थानं प्राप्स्यसि

மாம். முன்பு உபாதியாலே ப்ரதிகூலமான வத்துக்கும் மேல் உபாதிநிவ்ருத்தியில் ஸ்வத: ப்ராதாநுகூல்யத்துக்கு விரோதமில்லை.

மற்றும் ஸர்வேச்வரனுடைய ஸ்வரூப-ரூப குண விபூதிகளில் பாஹ்ய குத்ருஷ்டிகள் சொல்லும் வ்ருதாஜல்பங்களை எல்லாம் முன்பு சொன்ன ப்ரமாணதர்க்கங்களாலே உந்மூலநம் பண்ணுவது,

**சிறை நிலையாம்பவத்தில் சிறுதேனின்பமுண்டுழல்வார்**
**மறை நிலைகண்டறியா மயல் மாற்றிய மன்னருளே**

---

வன்று இதில குறறமிலலை யெனறபடி முனதயாகம் செய்ததற்குக்காரணமென்னவெனக்கூறுகிறார் முன்பு என்று இன்னும் தெளியவேண்டியவற்றையும் இககணககிலே தெளிநது கொன்வது மேலே பிற மத தூஷணஙகளினின்றும் எல்லாம் தெளியலாகு மென்று கருதி அதிகாரததை முடிக்கிறார் மற்றுமிதி பலஜம=பலமில்லாத ஒருவகை புல்,

சிறுதேன் உண்டு திண்டாடுமவர்களுக்குஅழியாத வமுதககடலைக் காண்பித்தோம் இவ்வதிகாரத்திலெ ன்கிறார் நிகமனப்பாசுரத்தில் சிறை இத்யாதி பாட்டில் மாற்றிய என்பதற்கு குருக்கள் என்ற விடததில் அநவயம் இயம்பின எனபது இறைநிலை என்பதற்கு விசேஷணம். ஆக—மறை நிலைகண்டு= குருக்கள் வேதங்களின் உறுதியான பொருளை யாராய்ந்ததாலே, சிறை நிலை ஆம். காராக்ருஹ வாஸமாகிற, பவத்தில் [illegible]ர்தில் ஸம்ஸாரத்தில், சிறு தேன் இன்பம்= தாபத்ரயக்கசப்பினிடையில் சிறறினபமாம் சிறுதுளியை, உண்டு= போக்யமாக நினைத்து உழல்வார்= உழன்றுவரும் ப்ரஜைகளின்

துறைநிலை பாரமெனத் துளங்கா அமுதக்கடலாம்
இறைநிலை யாமுரைத்தோம் எம் குருக்கள்
இயம்பினவே.

---

அறியா அறியாமைக்கான மயல் அஜ்ஞானத்தை மாற்றிய=மாற்றியருளிய, எம் குருக்கள்,=எமது ஆசார்யர்கள் இயம்பின—உபதேசித்தவையான—மன் அருள்ஏ-எம்பெருமானின் நிலையான கிருபையே. துறை-அமுதக்கடலில் இழிவதற்கு மார்க்கம்; நிலை எங்கும் நிலைத்திருப்பே நிற்குமிடமே, பாரம்-பார் தீர ஸமாப்தி-சிறை நிலைக்கு முடிவு என=என்னும் படி, துளங்கா=அசையாமலிருக்கும் அமுதக்கடல் அமுத வடிவேயான கடலான இறை—போக்யமான பரிபூர்ண பரம்மத்தின் நிலை உண்மைகளை யாம்-உபதேசம் பெற்ற நாம் ஸாம்ப்ரதாயிகமாகவே உரைத்தோம்—விளக்கினோமென்றபடி ஆசார்யோபதேசம் பெறுவிடில் இறைநிலை யுணர்வரிது. மறைநிலை காணுவிடில் உபதேசம் உண்மை விஷயமாகாது அஜ்ஞானத்தினால் ஸம்ஸாரமென்பதையும் மறைமூலம் தான் அறியவேணும். மறைநிலையைக் காணுதல் விசதஜ்ஞானம் அதில்லையாகில் பாஹ்ய குத்ருஷ்டிகளின் பக்ஷங்களில் ப்ரவேசமே. அப்போது சிறு தேனுண்டுழல்வாரின் நிலையிலும் நீசமான நிலையாகும். அபாரமான அமுதக்கடலுக்குப் பாரம் கிடையாது கடலிலேயே நிலைத்திருக்க விரும்பும் முக்தர்கள் பாரத்தை விரும்பவும் மாட்டார்கள். இக்கடலின் துறையிலிழிந்தால் இது

त्रय्यन्तत्राणमेतत् कविकथकहरेरुत्थितं वेङ्कटेशात्
दत्तं सद्भिः दधानः स्थिर.चतुर मृदूदार गंभीरगुम्भम्।

---

ஸம்ஸாரத்திற்குப் பாரமாகும் இங்கு நிற்க முடிய வில்லை யென்று மீண்டும உழலச்செல்வானென்ப தில்லை துறையெதென்னில், அவனது அருள் சாச்வதமாய் துறையாக நிற்கின்றதே. செய்த குற்றங்களுக்கு அஞ்சவேண்டா இழியலாம், எப்போதும் எங்கும நிற்கலாமென்றவாறு அவனது எல்லா குணங்களையும் உரைத்தோ.. என்றபடி

இதுவரையிலான மூன்று அதிகாரங்கள் ஸ்வபக்ஷஸ்த்தாபனபேடிகை மேலே பரபக்ஷப்ரதிக்ஷேப பேடிகை. இதை யறியாதவன் பரபக்ஷப்ரதி க்ஷேபத்தில் வல்லனாகமாட்டான் ஸ்வயம் விசேஷபுத்தி யுள்ளவனுககு இது மட்டும் கூடபோதும், ஸ்வபுத்தியால் பிறரை வெல்லலாமே யென்று அறிவிப்பாராய், இப்பேடிகையின் முடிவாக ச்லோகம் அருளிச் செய்கிறார்—त्रयीत्यादि यः कश्चित् எவனேயாயினும் वामनोऽपि அளவிற் குறையுடையனாகிலும் स्थिर... गुम्भम्—தன் பொருளில் நிலை நின்றதும், ஸாதிப்பதில் ஸாமார்த்தியமுடையதும், க்ரூரம் ஆடம்பரமின்றி மெதுவாயும், பல கருத்துக் கொள்வதும், அறியவரிதுமான சொற்றொடர்ச்சியையுடையதான, கவிதார்க்கிக சிங்கமான ஸ்ரீவேங்கடநாதனிடம் பிறந்த இந்த வேதாந்தரக்ஷணபேடிகாபாகத்தை அறிவாளிகளால் அளிககப்பட்டு தரிக்கின்றவனாய் प्रकटित महिमा தனக்கு

विरोधமில்லை, अर्चावतारத்தில் वर्ण-भुज भूषण अस्त्र लाञ्छन पत्नी-परिजनादिविशेषங்களும் पूर्वपूर्व रूपानुरूपங்களாயிருப்பது शुभाश्रयत्वं இப் पञ्चरूपங்களிலும் एकरूपம்.

---

ஸத்துவமயமான ரூபம் உடைய அவதாரமே ஆராத்யம்; மற்றதில்லையென்று நிஷ்கர்ஷிக்கவேண்டும். இவற்றில் அர்ச்சாமூர்த்திகள் पर-व्यूह शुद्धविभवांசமானவையென்று தெரியலாயிற்று. अन्तर्यामिरूपமென்பது ப்ரதிஷ்ட்டாமூலமாகவன்றி தானே பகவத்ஸங்கல்ப்பத்தால் வருவதால் அதில் வ்யூஹ விபவாதி விபாகத்திற்கு விசேஷகாரணமில்லையாகையால் ஆதிமூலமான பரவாஸுதேவாம்சமென்று ஏக ரீதியாகச் சொல்வது தகுமென்று பெரியோர் திருவுள்ளமென்பது ஸ்ரீஸாராஸ்வாதிநியினின்று ஆராயப்பெறும்

அர்ச்சை விபவாதிகளிற்சேர்ந்ததென்பதற்கு साधकமான அடையாளங்களையும் காட்டுகிறார் अर्चा-वतारத்தில் என்று, வர்ணம் = நிறம், लाञ्छनம் அடையாளம் கொடி போன்றது शुभाश्रयत्वத்தில் சுபத்வமாவது (ஆச்ரிதர் விஷயத்தில்) ஹேயநிவர்த்தகத்வம்; ஆச்ரயத்வமாவது சித்தத்தில் எளிதிற்பதிந்திருக்கை சுபத்வம் பரமாத்மஸ்வரூபத்திற்கும்உண்டு; ஆச்ரயத்வமில்லை திருமேனியை த்யானம்செய்து மனம் பகவமான பிறகே பரமாத்மஸ்வரூபம் த்யானத்திற்கு गोचरமாகுமென்றார் ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில், பஞ்சரூபங்களிலும இதி வ்யூஹததில் வ்யூஹாநதரத்தையும் விபவத்தில் விபவாநதரததையும் अन्तर्भूत

॥ श्रीः ॥

॥ समुदायदोष(भङ्ग)ाधिकारः पञ्चमः ॥

(ஐந்தாவது ஸமுதாயதோஷ (பங்க)ாதிகாரம்)

வெறியார் துளவுடை வித்தகன்
தனைமையின் மெய்யறிவார்

இனி ஆறுவது அதிகாரததினின்று இருநப தாவது அதிகாரம் வரையிலான பதினைந்து அதிகாரஙகளாலே ப்ரஸிததமான பதினைநது மதஙசளை நிராகரிக்கப் போகின்றவராய், அவற்றிறகும் அவற்றைப்போன்றவறறிற்கும் பொதுவான தூஷணங்களை ஐந்தாவது அதிகாரத்திலே ஸங்க்ரஹிககிறார். இதனுல் நேராக எடுததுக் கழிக்காத வேறு மதங்களும் தாமே கழிக்கப்பட்டதாம். முதலில்—பிறரை தூஷிப்பது பரமைகாநதிக்குத் தகுமா என்பதற்குப் பாட்டினுல் மறுமாறறம் அளிப்பதுடன், मानाधीना मेयसिद्धिः என்கிற ந்யாயப்படி ப்ரமாணத்தைக் கொண்டே அநதநத மத ப்ரமேயம் ஸித்திகக வேண்டுகையால் பரமாணமில்லாதபோது அதது ஸிததிகக வழியில்லை; யுகதி மட்டும் கொண்டு வாதிப்பவருக்கு யுகதி என்ற பரமாணத்தின बलाबलम் பார்க்கவேண்டும்; शब्दप्रमाणத்தை இசைந்த போது வேதம் போன்று ப்ரபலமான சப்தம் வேறு கிடையாதாகையால் வேறு மதங்களை விரைவில் வெல்லுவதாம் என்ற கருத்தாலே வேத பரமாணத்தைக் கொண்டு முன்னோர் செய்த வெற்றியைப் பாராட்டுகிறார் வெறியார் இதி. வெறி—மணத்தினுல் ஆர்—

குறியார் நெடியவரென்று
  ஒரு குற்றம பிறர்க்குரையார்
அறியார் திறத்தில் அருள்
  புரிந்து ஆரண நன்னெறியால்
சிறியார் வழிகள் அழிப்
  பதும் தீங்கு கழிப்பதற்கே 10

---

*நிறைந்த துளவு*—திருத்துழாயை உடை—திருமேனியி லெங்கும் உடையவனுன *விநதகன்*—ஆச்சர்ய புருஷனின்—*மாயனின*, *தன்மையின்*—ஸ்வபாவத்தின் *மெய்*—உண்மையை *அறிவார்*—அறிநதிருக்கும் ஆசார்யர்கள், *பிறர்கரு*-பிறரைககண்டு, *குறியார்*=இவர்கள் குள்ளர்கள், *நெடியாா*—இவர்கள் நீண்டவர்கள் *என்று*—என்றது போனற, *ஒரு குற்றம்*—ஒருவிதமான குறையையும் *உரையாா*=சொல்லமாட்டார்கள். ஸர்வேச்வரன அவனவன் கர்மானுகுணமாக குள்ளன், நீளன், ஏழை, குருடன் எனறுற்போன்ற ஸருஷ்டிகளைச செய்கிறுன், ஆதமாக்கள் எல்லாம் ஒரே விதமே எனறறிநதிருபபதால தேஹாதிகளுக்கான குறைகளை ஆதமாவுககு ஏற்ற மாட்டார்கள். சேஷியான ஈச்வரன திருவுள்ளம் பறறியிருப்பதை அவனுக்கு அனுகூலமான பெரியோர் தவருக நினைத்து நிநதிககமாட்டாா. ஆத்மஞானம் உடையவர் தேஹாதிகளிலுள்ள குறைகளை ஆதமாவுக்கு ஏற்றி தூஷிப்பதையும் செய்யமாட்டார்களென்றபடி மததூஷணம் மனுஷ்யதூஷணமாகாதென்கிறுர் மேலே. *அறியார் திறத்தில்*=ஞானமில்லாதார் விஷயத்தில் இரு

பை கூர்ந்து, ஆரணம் நல்நெறியால் = ஆரண்யகம்—வேதாந்தம் காண்பிக்கும் சிறந்த வழியைக்கொண்டு, சிறியார் வழிகள், ஸ்வல்பஞான சக்தியை யுடையவர்கள் கல்ப்பித்த மதப்போக்குகளை, அழிப்பது உம் = மாள்விப்பதும், ஸ்வபக்ஷஸ்த்தாபனம் போலே, தீங்கு கழிப்பதற்கு ஏ—அவற்றிலிழிவதால் நேரும் அனர்த்தங்களில் பரஜைகள் அகப்படாமைக்கே யாகும் குழந்தைகள் அபத்யம் உண்ணுமலிருக்கத் தந்தைகள் பாடுபடுகின்றது போலாகும பெரியோர் பிறமதங்களை யழிப்பது அம்மதங்கள் மேன்மேலோங்குவதையும் பலர் அவற்றிலிழிவதையும் கண்டு அரைகுறை ஞானமுள்ளவர் அவையும் ப்ராமாணிகமாகலாமென்று ப்ரமிப்பார்களாகில் பெருந்தீங்கல்லவா ஆகையால் உள்ள தோஷத்தை யெடுத்துரைப்பதே தகுமென்றபடி முதலில் ஸமுதாயத்திற்கு தோஷம (10)

2 எந்த மதத்தினரும் ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தோடு நிற்காமல் ஆத்மாவின க்ஷேமத்திற்கு அனேக வழிகளை யாராய்கின்றனர், அவற்றிற்கு ப்ரமாணம அவசியம் வேண்டும், நமது மதத்திறகு வேதம் போல் அததற்கும் ஒன்று கூறவேண்டும் இந்த வேதத்தை எவ்விதத்திலும் அப்ரமாணமென்ன வொண்ணுது, வேறென்று இதற்கு ஈடாக யாரும் ஸ்த்தாபிகக முடியாது என்று ப்ரமாண வைஷம்யத்தைக காட்டி ப்ரமேய தூஷணமென்பது இவ்வதிகாரத்திற் கூறும பொதுவான விஷயம். இதறகு முன்

प्रबलप्रमाणसिद्ध स्वपक्षोपक्षेपपूर्वकமாக संग्रहेण पर-पक्षங்களைக் கழித்தோம். மேல் मन्दमतिகளுக்கு 'अज्ञश्चा-श्रद्दधानश्च संशयात्मा विनश्यति' 'नायं लोकोऽस्ति न परो न सुखं

---

சொன்னதோடு ஸங்கதியையும் பலனையும் முதலில் காட்டி, பிறமத தூஷணத்தால் தூஷிப்பவனுக்குத் தீங்கு விளையாது, நன்மையே என்பதையும் கூறி விட்டுப் பின்னே விஷயாரம்பமாகும். प्रबलेति । ஸ்வ பக்ஷம் ப்ரபலமான ப்ரமாணத்தினால் ஸித்தமான தென்பதைக் கீழ் விளக்கின முகத்தால் ஒருபடி பிற பக்ஷங்கள் தூஷிக்கப்பட்டனவேயாம் சிற்சில அம்சங்கள் மதாந்தரங்களிலுள்ளவை நேராகவும் கழிக்கப்பெற்றன, ஆனாலும் கூர்மதியாயிராதவர்க் குக் கலக்கம் வாராமைக்காக இதன் ஆரம்பமாகும் வியாஸபகவானே ப்ரஹ்மஸூத்ரத்தில் 2.2. தர்க்க பாதத்தில் பிறமதங்களை நிராகரித்திருக்கிறார், எல்லா மதங்களும் ஸமபலங்களென்று நினைத்தால் எதைக் கொள்வதென்று ஸம்சயம் வருமாகையாலே நிரா கரிக்க வேண்டுமென்று எல்லோரும் கூறினர். நம் மதத்தில் ஆஸ்திகர்களுக்கும் ச்ரத்தை குறையுமாகை யால் நிராகரிக்க வேண்டுமென்றார் ஸ்ரீபாஷ்யகாரர், ஸம்சயத்துடன் செய்தாலும் அச்ரத்தையுடன் செய் தாலும் வியாபாரம் வியவஸாயம் சிகித்ஸை முதலான வற்றில் பலன் காண்கிறபடியால் அவை யிருந்தா லென்ன என்று சிலர் நினைப்பர் அது தவறு. அஜ் ஞானமுள்ளவனும் (செய்யத்தெரியாதவனும்) தெரிந் தும் அச்ரத்தையாயிருப்பவனும், ஸம்சய ஸ்வபாவனு

संशयात्मनः' 'असंशयान् हैतुकान् नाध्यावसति माधवः' इत्यादिகளில் சொன்ன दोषं வாராமைக்காக परपक्षங்களை निश्शेषமாகக் கழிக்க வேண்டுகையாலே இவற்றுக்கு முற்பட समुदायदोषம் சொல்லுகிறோம்

---

யிருப்பவனும் பலன் பெறுகிறதில்லை ஸம்சயப்படுகிறவனுக்கு இம்மைப் பலனுமில்லை; மறுமைப் பலனுமில்லை. அச்ரத்தையோ ஸம்சயமோ இருந்தால் சிலரே செய்வா, சிலர் செய்யார் செய்யாதவர்கள் பலன் இழப்பது திண்ணம். செய்பவரும் தயங்கித் தயங்கிச் செய்வதால் ஒழுங்காக உசிதகாலத்திற் செய்து முடிக்கமாட்டார்கள் இவர்கள் சரியாகச் செய்யமாட்டார்களென்று இவர்களைச் செய்ய அழைக்கமாட்டார்களாகையால் வேலையின்றி வருந்துவர், மறுமைப் பலனைக் கூறும் சாஸ்த்ரம் ச்ரத்தையுடன் செய்யவேண்டுமென்கிறது यस्य यावांश्च विश्वासः तस्य सिद्धिश्च तावती நம்பிக்கை யளவில் தான் பலன் என்பதாலே முழுப் பலன் பெற முடியாது, மேலும் பேற்றுகளுள் உயர்ந்தது பகவத்ப்ராப்தி माधवः ச்ரிய பதியானவன் असंशयान् தத்துவ ஹிதபுருஷார்த்தங்களிலே ஸம்சயமுடையவரிடம், எதற்கும் இது ஏன் இது ஏன் என்று ஹேது=காரணம் கேட்டவண்ணமிருப்பவரிடம் தங்கமாட்டான் விலகியே யிருப்பான் என்றெல்லாம் ப்ரமாணமிருப்பதால், இவ் இழவு விவேகிகளுக்கு வேண்டாமென்பதற்காகவே பிறமதங்களை நிரஸிப்பதாம

3. உண்மை யறிவதற்காக ஸமரஸமாக வாதம்

(वादविधिनिषेधयोर्विभेदः)

यथाशक्ति निगृह्णीयात् देवता-गुरुनिन्दकान्', 'विद्याचोरो गुरुद्रोही वेदेश्वरविदूषकः । न एते बहुपापानः सद्यो दण्ड्याः इति श्रुतेः ॥' इत्यादिप्रमாணங்களாலும் 'तत्त्वाध्यवसायसंरक्षणार्थं जल्पवितण्डे बीजप्ररोहसंरक्षणार्थं

---

செய்யலாம்; பிறருடன் சண்டையிட்டு வாதம் செய்ய லாகாதென்பதற்குப பல ப்ரமாணங்களை மேலே குறிக்கப் போகின்றாராய், அந்த ப்ரமாணங்கள் இருவரும் ஆஸ்திகராயிருந்து செய்யும் வாத விஷய மாகும் நாஸ்திகர்களோடு, வெல்லவேண்டுமென்றே வாதம் செய்வதும் தகுமென்று பல வசனங்களால அறிகிறோமென்கிறார் யதாசக்தி இத்யாதியால் 'வேத த்திற் கூறிய தேவதைகளையும் வைதிகர்களான ஆசார்யர்களையும் நிநதிக்கின்றவர்கள் யாவர், அவரை தன்னால் முடிநதவரையில் சிக்ஷிககவேண்டும்' வித்யை யைத் திருடுகிறவனும் அதாவது ஒருவன் ஒருவனுக்கு உபதேசிக்கும் போது உபதேசிப்பவனுக்குத் தெரி யாமல் மறைவில இருநதுதானும் அறிந்துகொள் பவனும், குருவுக்கு த்ரோஹம் செய்பவனும், வேதம் அப்ரமாணம், ஈச்வரன் இல்லை, பக்ஷபாதி என்றெல லாம தூஷிப்பவனுமாகிய இவர்கள் வெகு பாபம் செய்தவராவர். உடனே அவர்களை தண்டிக்க வேண்டுமென்கிறது வேதம்'' என்றெல்லாம் வசன ங்கள் உளவே. அக்ஷபாதர் என்ற கௌதமரும் தமது ந்யாயதர்சநமென்கிற நூலிலே சொன்னார்— 'வேதத்தின பரமார்த்த நிர்ணயத்தைக் காக்க

कण्ठशाखावरणात्' என்று अक्षपादोक्तप्रकारத்தாலும்

வேண்டும் ஸந்தர்ப்பத்தில் அதற்கு எதிராக நாஸ்தி கர்கள், வெற்றியே ப்ரதானமாக எதிாகும் ஸநதர்ப் பத்தில் ஜல்ப்பம் விதண்டை என்ற சர்சசைகளையும் உபயோகபபடுத்தலாம் அதாவது வாதி ப்ரதி வாதிகள் செய்யும் சாச்சை கதை எனபபடும், அது வாதம் ஜல்ப்பம் விதண்டை என மூன்றுவிதமாம் தான் ஜெயிக்கவேண்டும், தான் சொன்னதை ஸ்தா பிக்க வேண்டுமென்கிற நோககினறி, எது பரமாண யுக்திகளுக்குப் பொருந்துமோ அதைக் கொள்வோ மெனறு சிலர் கூடிச் சர்ச்சை செய்வார்கள், இது சரியான வாதம், இது யாரும் செய்யத தக்கதே, இதை விட்டு அப்ராமாணிகத்தையும் ஸ்தாபிக்க ஆர்பாட்டம் செய்யும் நாஸ்திகர்கள் எதிர்த்தால் पिशाचानां पिशाचभाषयोत्तरं देयम् எனகிற கணககிலே நாமும் ஜெயத்திற்கென்றே எதிர்க்கலாம் அப்போது ஆபாஸதர்க்க ஆபாஸ பரமாணங்களையும நல்லன போல்காண்பிக்கலாம்,அச் சர்ச்சை ஜலபபமுமவிதண் டையுமாம், தனககு ஒரு பக்ஷமிருநதால் ஜல்ப்பம், தான் ஒரு பக்ஷத்தையும் கொள்ளாமல பிறா சொல்லு வதற்கெல்லாம் எதிர்வாதம் செய்தால் விதண்டை. தத்துவத்தைக் காக்க இது எங்ஙனே பயன்படு மென்னில்—விதை விதைத்தால் முளையெழுந்து வளர்வதற்காக முள்வேலி போடுகிறோம செடி வளர்வது நீராலும மண்ணின் ஸாரத்தாலும்; வேலியாலில்லை. ஆனாலும ஆடுமாடு புகுந்து அழிக்

विजिगीषुकथैயிலே நின்று वेदविप्लावकबाह्यकुदृष्टिகளை निराकरிக்கை प्राप्तமாகையாலே, 'न विगृह्य कथां कुर्यात्' 'अधीयानः पण्डितंमन्यमानो यो विद्यया हन्ति यशः परेषाम् । तस्यान्तवन्तश्च भवन्ति लोका न चास्य तत् ब्रह्म फलं ददाति ॥', 'वादेन ब्राह्मणान् जित्वा हृष्टो भवति यो नरः । श्मशाने पादपस्तु स्यात् कंक(काक)गृध्रनिषेवितः ॥'. 'गुरुं त्वंकृत्य हुंकृत्य विप्रं निर्जित्य

---

காதபடி காக்க வேண்டியதாகிறது. நாஸ்திக்ய வாதத்தை நெருங்காதபடி செய்ய ஜல்பவிதண்டைகள்' என்றவாறு இப்படி 'न विगृह्य कथां कुर्यात् = சண்டையிட்டுச் சர்ச்சிப்பது கூடாது' என்ற நிஷேத வாக்யத்திற்கெதிர்ப்படச் சொல்வதினின்று நாஸ்திகராய் பாஹ்யகுத்ருஷ்டிகள் வேதத்தைக் கலக்குபவராய் கோணலான வழியிலிழியும் போது இச் சர்ச்சைகள் தகுமென்று தெரிவதால், ப்ராமாணிகர்களாய், உண்மையே விளங்க வேணும்; सत्यमेव जयति नानृतम्' என்று வாதிப்பவரிடம் வெற்றி பெற வாதம் செய்தல் மஹாபாபமென்று கொள்க. "ஓதுகின்றவன் எவன் தன்னைப் பண்டிதனாக நினைத்துக்கொண்டு தனக்குள்ள ஞானத்தைக் கொண்டு பிறருடைய புகழையழிக்க முயல்கிறானோ, அவனுக்குப் பலன்களெல்லாம் அழிவுள்ளவையேயாகும் அவனுக்கு பரப்ரஹ்மம் அல்லது வேதம் பலன் அளிக்காது". பலன் குறைவென்பது மட்டுமல்ல; கேடுகளும் பல. 'வாதத்தில் இழிந்து அந்தணர்களை வென்று யாவன் களித்திருக்கிறானோ, அவன் கழுகும் பறந்தும் நிலையாயிருக்கும் ஒரு மர

यादृनःइत्यादिகள் वीतरागवैदिकविषयजिज्ञासनங்களாகக்கடவன.

4 वादம் ஒன்றுமே कथै என்று ஜைநாசிரியர்கள் கட்டினது प्रमाण तर्कभாவங்களைக்கொண்டு [illegible]ரிக்கையாலே

---

மாகச் சுடுகாட்டில் 'இரு [illegible]ான' என்கிறதே 'குருவை நீ என்று நிந்தையாகச் சொன்னாலும், வாதத்தில் ப்ராஹ்மணனை வென்றாலும் இப் பலனேயாம்' என்றாற்போன்ற வசனங்களை மீறி பரமததூஷணம் செய்வது தகுமா என்பதற்குக் கீழ் கூறியதே ஸமா தானமாம் இதெல்லாம் நாஸ்திகரோடு வாதத் திலல்ல ; ஆஸ்திகன் வீதராகனாய் அதாவது வெற்றி யிலே நோக்கின்றி வேதேச்வராதிகளை இசைந்து சில வாக்யங்களுக்குப் பொருள் தெளிவதற்காகச் செய் யும் சர்ச்சையில் இந்த நியமமென்றவாறு.

4 கேள்வி—ஆஸ்திகராயிருந்தும் கௌதமர் कथैயை மூன்றாகப் பிரித்து जल्पवितण्डैகளையும் சில ஸமயங் களில் ஆஸ்திகரும் கொள்ளலாமென்றது தகாது. இவரை விட நாஸ்திகதார்க்கிகர்களே நல்லோர்க ளென்னலாம். ஜைநாதிகள் कथै மூன்று விதமல்ல; वादம் ஒன்றே कथै தத்துவம் தெளிவதற்காகவே சர்ச்சை, வெற்றிக்காக ஒன்று செய்வதென்பது தவறு என்றே கொண்டிருக்கின்றனர். அவர்கள் எப் படி வேறுவிதமாகச் சர்ச்சை செய்ய முன் வருவர் என்று. இதற்கு விடை—அவர்கள் அவ்வாறு கூறியிருப்பது உண்மை அது என்ன வெனில்— அவர்கள் சொல்லும் जैनायनादिகள் கல்ப்பிதங்களாகை யாலே அவற்றைச் செய்தவர் எட்டாதவற்றை

முடிவில் தோற்கிறோமென்கிற भयத்தாலும் वीतरागत्व प्रसिद्धिயை யிட்டு विप्रलम्भिக்கைக்காகவுமாமித்தனை.

5 இப்படி शास्त्रसारासारத்தையும் धर्माधर्मादिகளையும்

---

யறிய வல்லரல்லராகையாலே ப்ரமாணுபாஸங்களென்பது உண்மை. அவற்றிற்குத் துணையான தர்க்கங்களும் அதனால் तर्काभासங்களேயாம். அதனால் தங்களுக்கு முடிவில் தோல்வி வருமென்பது நிச்சயமாகையால், வெற்றிக்காகச் செய்தோமென்றால் அபகீர்த்தியென்று பார்த்து, ‘தத்துவ ஆராய்ச்சி செய்தோம்; தற்சமயம் நீங்கள் சொல்வது நியாயமாகில் அதனால் எங்களுக்கு என்ன? உண்மையைத் தானே விரும்புகிறோமென்று தப்பித்துக்கொள்ளலாமென்று கருதி அவ்வாறு கூறினரென்க. மேலும் வைதிக தர்மங்களை விடுவதற்காக, வேறு தர்மங்களைத் தாங்களே கல்பித்துப் பகட்டுவது போல், வெற்றிக்காக ஒன்று செய்வதில்லை யென்று சொல்லிக் கொண்டே சர்ச்சித்தால் ப்ராமாணிகரென்று ப்ரமித்துப் பலர் சேரலாமென்ற கெட்ட எண்ணத்தினாலே இதென்க. சில பாஹ்யர் ஜல்ப்ப விதண்டைகளை இசையவில்லையானாலும் குத்ருஷ்டிகளுள்பட பலர் இசைவர்.

5 எவ்வளவு கபடகார்யம் ஜைநாதிகள் ஆதியில் செய்திருந்தாலும் அந்தக் கபடம் தெரியாமல் பிற்காலத்திய ஜைநாதிகள் அவற்றை ப்ராமாணிகங்களாகவே நம்பினரே யென்னில்—இருந்தாலும் அவை நிரஸிக்கவேண்டியவையே; பரமதநிராகரணம் பிசகில்லை யென்று கருதி முடித்தருள்கிறார் இப்படி இதி. இரண்

இசையாதாரும், धर्माधर्मादिகள் உண்டென்று இசைந்து वेदप्रामाण्य-த்தை இசையாதாரும், இரண்டையும் இசைந்திருப்பாரை சட்டையாக்கியுள்ள वेदबाह्यராயிருப்பாரும் निराकरणीयரென்னுமிடம் महाभारतादि

---

டையும் இசையாதார் சார்வாகர்; தர்மாதர்மாதிகள் உண்டு; அதனாலேயே அநாதியாகப் பல பிறவிகள். வேதம் அப்ரமாணமாகையால் ஜைநாகமாதிகளின் படியிலே தர்மாதர்மங்களையும் பல பிறவியையும் கொள்வதென்பர் ஜைநாதிகளான பாஹ்யர். இந்த चार्वाकजैनादिகளைப்போலே कुदृष्टिகளும் நிராகரிக்கப் படவேண்டியவர். ஏனெனில், அவரும் பாஹ்யரே. ஆனால் வேத ப்ராமாண்யத்தையும் அதன்படி தர்மாதர்மங்களையும் இசைந்த பலரைத் தங்களுக்கு வசமாக்கி அவர்கள் இவர்களை வைதிகரென்று புகழ்வதால் இவர்களுடைய தோஷத்தை மறைப்பதால் உடலின் தோஷத்தை மறைக்கும் சட்டைபோலானதால், எல்லாம் இசைந்தவராகத் தங்களைத் தாங்கள் எண்பிப்பதும் இதற்குத் துணையாகப் பல ஆஸ்திகர்கள் புகழ்வதுமே பசுத்தோல் போலாகி அது புலியுருவை மறைப்பது போல் இவர் நிலையை மறைத்து ப்ராமாணிகர்களென்றே ப்ரமிக்கச் செய்து விட்டதால் இவர்கள் प्रच्छन्नबाह्यர்கள். இவர்களுடைய வேத ப்ராமாண்ய ஸ்வீகாராதி வேஷம் இவர்கள்மேலுள்ள சட்டை. இவர்களைக் காணாதாரும் இவர்களை நல்லோராக நினைக்கும்படி எங்கும் புகழ்ந்து சொல்லித் திரியுமவர்கள் மேன்மேலானசட்டைகளாவர். என்னு

களில் பல உபாக்யானங்களிலும் கண்டுகொள்வது.

6 இப் பாஷண்டர்களுக்கெல்லாம் அநர்ஹிதங்களான தர்க்

---

மிடம் = என்கிற விஷயம் பல உபாக்யானங்கள். இந்த்ரன் ஸகர மஹாராஜனின் அச்வமேதக் குதிரையை யபஹரித்து விட்டுத் தான் அடிபடாமைக்காக தபஸ்விவேஷம பூண்டு ஓடினான். ராவணாதிகள் தவறுக்காக ஸந்யாஸிவேஷம் பூண்டார்கள். पाषण्डिनो विकर्मस्थान् बैडालव्रतिकांस्तथा। हैतुकान् बकवृत्तींश्च वाङ्मात्रेणापि नार्चयेत्॥ पुंसां जटाभरणमौण्ड्यवतां वृथैव मोघाशिनामखिलशौचबहिष्कृतानाम्। तोयप्रदानपितृपिण्डबहिष्कृतानां संभाषणादपि नराः नरकं प्रयान्ति என்றவாறான வசனங்கள் வேஷதாரிகளுடைய சேர்க்கையை விலக்குகிறன.

6 प्रत्यक्षप्रमथनपश्यतोहरत्वात् निर्दोषश्रुतिविमतेश्च बाह्यधर्मः। दुस्तर्कप्रभवतया च वक्तृदोषस्पृष्ट्या च प्रजहति रङ्गचन्द्र! वृद्धाः என்று பட்டர் அருளிச்செய்தபடி பாஹ்ய குத்ருஷ்டி பக்ஷங்களெல்லாவற்றிற்கும் பொதுவான தோஷம் பாதகமான தர்க்கங்களும் ப்ரமாணங்களும் ஒழுங்காயிராமையும் ப்ரபல ப்ரமாணங்களாலே பாதிக்கப்படுகையும். ப்ரமாணங்களாவன—ப்ரத்யக்ஷம், அநுமானம், சப்தம் என்பவை, தோஷமூலமான ப்ரத்யக்ஷத்தைக் கொண்டு சங்கு மஞ்ச நிறமென்றால் அந்த ப்ரத்யக்ஷம் ப்ரமாணமாகுமா. அதுபோல் ஒவ்வொரு ப்ரமாணமும் தோஷமிராமலிருக்க வேண்டும். பெரும்பாலாக ப்ரமாணத்தினால் நிர்ணயம் செய்வதற்குத் தர்க்கமும் துணையாகும். அதற்கு ஐந்து அங்கங்கள்

ங்களை परिकराங்களாகக்கொள்ளுகையும், उपजीव्य प्रत्य-

---

ஐந்தும் நிறைந்திருக்க வேண்டும், உதாரணம்— இம் மலை நெருப்புள்ளது புகையிருப்பதனால் என்று அனுமானம் செய்கிறான், அப்போது ஒருவன் புகையிருக்கட்டும், நெருப்பில்லாமலிருக்கட்டுமென்று கேட்கிறான். இதனால் அனுமானம் பண்ணுகிறவனுடைய பக்ஷத்திற்கு விபரீதமான, நெருப்பில்லை யென்ற பக்ஷத்தை அவன் விரும்புகிறானென்றதாயிற்று. இந்த விபரீத பக்ஷத்தை விபக்ஷமென்கிறது. இதற்கு बाधकம் சொல்லாத வரையில் அனுமானம் ஸாதிக்காது அதனால் மேலே அவன் சொல்வதாவது—நெருப்பு அங்கே யிராமற்போனால் புகையும் இருக்கவாகாது என்றதாம், இதுதான் தர்க்கம். இது विपक्षबाधकமெனப் படும். இது தர்க்க மாகவேண்டுமானால் ஐந்து அங்கங்கள் உள்ளனவா என்று கவனிக்க வேண்டும், அவையாவன—நெருப்பில்லாமையாகில், புகையில் லாமையுமாம் என்று अग्न्यभावத்துக்கும் धूमाभावத்துக்கும் வ்யாப்தியென்ற ஒன்றோடொன்றின் இணைப்பு ஓர் அங்கம். இந்தத் தர்க்கத்திற்கு எதிராக = மறுப்பாக வேறு தர்க்கம் இருக்கலாகாது இதனை ஆக்ஷேபிக்க முடியாதுஇது तर्कप्रतिहति. நெருப்பு புகைக்குக் காரணமாயிற்றே காரணமிராமல் கார்யம் வருமோ? இப்படி புகையிராமற் போயிடுமென்றால் கேட்டவனுக்கு அந்த धूमाभावपक्षம் இஷ்டமாகாமலிருக்க வேண்டும் அத்துடன் அந்தப்பக்ஷம் அவன்கொள்கைக்கு அனுகூலமாயிருக்கலாகாது ஆக அநிஷ்டமா

ஷாதிவிருத்தஹேதுக்களை ப்ரயோகிக்கையும், அனாதிநிதன—அவி-

யிருக்கை, அநநுகூலமாயிருக்கை யென்ற இரண்டு அங்கங்கள், ஐந்தாவது அங்கமாவது இப்படி தூமாபாவம் இஷ்டமன்றி தூமமே இஷ்டமாகையால், அக்நயபாவமும் இஷ்டமாக முடியாது; அக்நியே இருக்கவேண்டுமென் கிற முடிவாம். இதற்கு விபர்யயபர்யவஸாநமென்று பெயர் இதன் பிறகு நெருப்பு இராமலிருக்கட்டுமென்று முன் கேள்வி கேட்டவன் அக்நயபாவத்திலே தனக் குள்ள விருப்பத்தை விட்டுவிடுகிறான். எதிர்வாதம் தீர்ந்த படியால் தூமமுள்ள விடமெல்லாம அக்நியுள தென்கிற வ்யாப்திஜ்ஞான முண்டாகிறது. உடனே அக்னிக்கு அனுமானம் இவ் வைநதில் ஏதேனும் அங்கஹீன மேற்பட்டால விபக்ஷபாதகமான தர்க்க மிராதாகை யால் வஸ்துவை நிர்ணயிக்க முடியாது இப்படி அங்கஹீனமாகாத தர்க்கம் பிறமதங்களிலே கிடைப் பது அரிது

தவிர, அனுமானமென்பது ப்ரத்யக்ஷத்தைப் பின்பற்றி வரும் ப்ரமாணம் மலையில் புகை யைக் கண்ணுல் கண்ட பிறகு தானே அக்னிக்கு அனுமானம். இப்படி ப்ரத்யக்ஷம் அனுமானத்திற்கு உபஜீவ்யம் = சார்வாகிறது. இது போல், முதலில் ஒன் றை அனுமானத்தால் ஸ்தாபித்து விட்டு அது மூல மாக வேறொன்றை யநுமானம் செய்யுமிடத்திலே அனுமானமும் சார்வாகும். ஒருவன் ஒரு விஷயம் சொல்லக் கேட்டு அந்தச் சொல்லினின்று ஏதேனும் அனுமானம் செய்யுமிடத்திலே சப்த ப்ரமாணமும்

छिन्नसंप्रदायतையாலே निर्दोषமான वेदத்திற்கு विरुद्धங்களைச் சொல்லுகையும், भ्रम विप्रलिप्सादि दोषदूषितரான

---

சார்வாகும். உபஜீவயங்களான அவற்றுடன் முரண்படும்படி ஹேதுக்களை = அனுமானங்களைக் கூறலாகாது பிறமதங்களிலே சில விடங்களிலே இவையெய்லாம் காணப்பெறும் முக்கியமாக நாம் இசைந்த வேத ப்ரமாணத்திற்கு விருத்தமாகில் முழுமையும் விடத்தக்கதே வேதம் எங்களுக்கு ப்ரமாணமல்லவே யென்று அவர்கள் நினைக்கலாம். ப்ரமாணமாகாமைக்கு என்ன காரணம்? அவர்களே கூறவேண்டும். வேதம் எழுதிய புருஷர்களிடத்தில் நம்பிக்கையில்லையென்னில் புத்த ஜிநாதிகளைவிட அவர்களிடத்தில் நம்பிக்கையில்லாமைக்கு என்ன காரணம்? எழுதினவர் இன்னாரென்றே தெரியவில்லையே; எங்கே தோஷம் கூறுவது. சில நாட்களுக்கு முன் தானே வேதம் ப்ரசாரத்திற்கு வந்ததென்னலாகாது. ஆதி = ஆரம்பம், निधनம் = முடிவு என்றவையின்றி முற்காலம் முழுமையிலும் இருக்கின்றதே. முதலில் இருந்தபடி பின்னுலிராமல் மாறிமாறிப்படிப்பதால் நம்பிக்கையில்லை யென்னவொண்ணாது. अविच्छिन्न-संप्रदायமாயிருக்கிறது. ஒருவரிடமிருந்து ஒருவர் ஓதுவதென்ற முறையிலே என்றும் தொடர்ச்சியாய் வருகின்றதே.

இதற்கு நேர்மாறாக பாஹ்யர் இசைந்த ஆகமங்களே தோஷமுள்ளவையாகும். நம்மைப்போலே புத்தர் ஜினர் என்பவரும் ஜீவர்களானபடியால்,

புருஷர்களுடைய வாக்யங்களை ப்ரமாணமாகக் கொள்ளுகை யும் திரண்ட தோஷம். அவர்கள் சொல்லும் தர்க்கங் களுடைய ஆபாஸத்தையும், ப்ரத்யக்ஷாதிவிரோதத்தையும் அவ்வோ அவஸரங்களிலே காட்டக்கடவோம்.

---

भ्रान्तेः पुरुषधर्मत्वात् என்கிற ந்யாயமாய் அவர்களுக்கும் ப்ராந்தி=விபரீத ஞானம் கூடும். மேலும் ஒருவர் சொன்னபடி மற்றவர் சொல்லாதபடியால் முரண் படுமவற்றில் ஒன்றை யிசைந்தால் மற்றவற்றிற்கு ப்ராந்தியோ, ப்ரஜைகளை ஏமாற்ற வேண்டுமென்கிற வஞ்சநாபுத்தியோ ஏதோ காரணமென்றே கொள்ள வேண்டும். सुगतो यदि सर्वज्ञः कपिलो नेति का प्रमा। तावुभौ यदि सर्वज्ञौ मतिभेदः कथं भवेत्? ப்ரமம், விப்ர லிப்ஸை=வஞ்சநாபுத்தி, இரண்டுமில்லை யென்றால், சொல்லும் போது வாய் குளறித் தவருகச் சொன் ஞர்களென்ருவது கொள்ளவேண்டும். அப்போது கரணாபாடவம் என்பது தோஷம். ஒரு புத்தர் நாலு சிஷ்யர்களுக்கு நாலுவிதமாய் அவரவரின் நோக்குக் கிணங்கி இச்சகமாகச் சொன்ஞரென்பதினின்றே, 'உண்மையில் நோக்கில்லை; எப்படியாவது வேத த்தை எதிர்த்தால் போதும்' என்ற கெட்ட எண்ண மிருப்பது கண்கூடு. அப்படிப்பட்டவர்களின் வாக்ய ங்களை ஆகமங்களென்று கொண்டாடும் பின்னுள்ளார் தங்கள் நிலையைத் தாங்களே உணரவேண்டும். இவ் வளவு தோஷங்கள் இருக்கின்றன என்பதை மேலே அவரவர் மதத்தைத் தனித்தனியே தூஷிக்குமிடத் திலே நாம் விரிவாகக் கூறப்போவதால் அவர்கள்

7 वेदम् नित्यनिर्दोषमாய்க்கொண்டு प्रमाणமாஞலன்றே परमतங்களுக்கு वेदविरोधம் दोषமாவது? वर्ण पद वाक्यங் களுக்கு प्रत्यक्षादिகளாலே अनित्यत्वம் தோன்றாநிற்க वेदம் नित्यமாம்படி என் என்னில், पदத்துக்கும் वेदத்துக்கும் नित्यत्वமாவது, सर्वकालத்திலும் एकरूपक्रम विशेष विशिष्ट

---

எல்லோரும் ஒன்று சேர்ந்து எல்லாம் விட்டுப் பண்டைய வேதத்தைப் பின்பற்றுவதே நியாயமாகும்

7 எங்கள் மதங்களுக்கு எக்கேடு நேரிலும் சரி வேதம் நித்யமானது; எனவே நிர்தோஷமுமாகிறது என்பது எங்ஙனே. அது ப்ரமாணமாகாத போது அதற்கு விருத்தமாயிருப்பதால் எங்கள் மதம் தவறென்று கூறலாகுமோ, வேதம் நித்யமன்றென்பதற்கு ப்ரமாணம் உளது. வேதமாவது பல சொற்றொடர்ச்சி; மனிதன் வாயைத்திறந்து பேசும்போது வர்ணங்கள் = அக்ஷரங்கள் உண்டாகின்றன பல வர்ணங்கள் வரிசையாக ஒருவிதம் உண்டாக, பதங்கள் ஏற்படுகின்றன பதங்களின் சேர்க்கை ஒரு திரண்ட பொருளைக் கூறுமாகில் வாக்யமெனப்படும். அத்தகைய வாக்யங்களின் பல திரள்கள் நூல்களாகின்றன. வேதமும் இத்தகையதே. இப்படி வாய் மூலம் வேதசப்தங்கள் உண்டாவதும் அழிவதுமாய் காணலாயிருக்க, வேதம் நித்யமென்று எங்ஙனே ஏமாற்றுவது என்று பாஹ்யர் கேட்கலாம் இதற்கு விடை—வர்ணங்கள் அநித்யங்களென்பதை இசைகிறோம். அவ் வர்ணங்களின் தொடர்ச்சி தான் பதமும் வாக்யமும். ஆனாலும் பதங்கள் நித்யங்க

மாய்க்கொண்டு ப்ரயோகிக்கப்படுகையாலே. க்ரமவ்ருத்தி களுக்குப்போலே வர்ணத்துக்கும் வேதோக்தமான உத்பத்தி ஸ்தானங்களைக் கொண்டாலும், ஈச்வரனும் மற்றுள்ள ப்ரவர்த்தகருமெல்லாம் ஏக ரூபமாக ப்ரவர்த்திப்பிக்கையாலே

---

ளென்போம். அதாவது வேதத்திலுள்ள பதங்கள் இவ்வாறே எல்லா கல்ப்பங்களிலும் வழங்கப் படுகின்றன பதங்கள் பிறந்தவை யாறைலும் போனது போனதே. மீண்டும் சொல்வதில்லை யென் றுதபடி திரும்பத் திரும்ப யாராவது ப்ரயோ கித்து வருவதால் ஆற்றின் வெள்ளம்போல் = போன வெள்ளம் போன்ற வெள்ளம் மீண்டும் வருகிறது போல் பதங்கள் வந்தவண்ணமிருப்பதைக் கொண்டு நித்யமென்கிறோம். அவைபோல் வேதமும் இப்போது எந்த முறையிலே அக்ஷரங்கள் வரிசைப் பட விளங்குகிறதோ, அப்படியே எல்லாக் காலத்தி லும் ஒதப்படுவதால் நித்யமெனப்படும். மற்ற நூல் கள் கவிகளால் செய்யப்பட்டவை ஒருகாலத்தில் புதி யனவாக உண்டாகி, அதற்கு மூன் இல்லாமல் அது போல் பின்னும் யாருக்கும் தெரியாமல் ஒழிகின்றன இவைபோல் அனுதியாயில்லை. அதனால் அவை அநித் யங்கள், அவற்றைக் கவிகள் இயற்றுகின்றனர். பின்னே சில நாள்களில் போய்விடுகின்றன. வேதம் அவை போலன்றி என்றும் ஒரேவிதமாய் ஸ்வரம் கூட மாறுமல் விளங்குவதால் நித்யமெனப்படும். இதுவரையில் ஊழிதோறூழி வந்தது போல மேலும் தொடரும். ஏகரூபக்ரமவிசேஷவிசிஷ்டமாய் = இது

पदत्वेदयम् वेदत्वेदयम् नित्यमेन्नलாம்.
8 वर्ण नित्यत्वमुण्டாनாலும் पुरुषबुद्ध्यधीनक्रमविशेषம्

முதலெழுத்து இது இரண்டாமெழுத்து, இது முதற்பதம் இது மேற்பதம் இது கடைப்பதம், கடையெழுத்து என்ற க்ரமம் சிறிதும் மாறுவதில்லை க்ரமமாவது ஒன்றின்பின் ஒன்றாகை ஒருவன் சொல்லும்போது அவ்வர்ணங்கள் போல் அவற்றின் க்ரமமும் உண்டாக்கப்படுகிறது. மற்றொருவன் அதையே சொல்லும் போதும் வர்ணங்களுடன் அத்தோடு அவ்வர்ண முறையும் உண்டாவதே. ஆனாலும் முன் வர்ணமுறையும் பின் வர்ணமுறையும் வெவ்வேறாயினும் ஏகரூபம்=ஒரேவிதமாம். ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலீச்வரன் பிரமனுக்கு உபதேசிக்கும் போது அவன் திருமுகத்தில் வேதாக்ஷரங்கள் உண்டாகின்றவையே. ஆனால் எம் முறையில் என்னில், முன் கல்பத்தில் அவன் ப்ரசாரம் செய்த வேதம் அவ்வாறே அவன் மனத்திலிருப்பதாலும் ஒரே விதமாக தர்மாதர்ம வ்யவஸ்த்தை குலையாமலிருக்க வேண்டுமென்றும் அதே க்ரமத்தில் உபதேசிக்கிறான். இப்படியே ஒவ்வொரு கல்பத்திலும், எனவே ஈச்வரன் ஒருநாள் புதிதாக இயற்றினனென்று சொல்லவாகாதாகையால் வேதம் அபௌருஷேயமாகும்.

8 கேள்வி—அக்ஷரங்கள் அப்போதைக்கப்போது உண்டாகின்றன என்று சொன்ன பாஹ்யரின் பக்ஷத்தில் நின்றுகொண்டே வேதம் நித்யமென்று ஸ்தாபித்தீரே என்று மெச்சுகிறோம். ஆனாலும் இது

கொண்டபோது अनित्यत्वम् வரும். शब्दाधिकरणத்தில் शबरस्वाम्यादिकள் वर्ण नित्यत्व व्याख्यान् பண்ணின இடம் अनपेक्षितवचनம் । बौद्धादिकளைக் குறித்து वैभववाद

---

நேர்த்தியான வழியல்ல. வர்ணங்கள் எல்லாம் நித்ய மென்றல்லவோ 'மீமாம் ஸையில் ஜைமிநிமஹர்ஷி வரைநதிருக்கிருரென்னில்—ஜைமிநி அவ்வாறு கூற வில்லை. அவர் ஸூத்ரங்களுக்கு உரையிட்ட சபர ஸ்வாமி, குமாரிளபட்டர் போன்ற பாஷ்யகாரவார்த் திககாராதிகள் கல்பபித்த வழி அது. உண்மையான ஜைமிநி ஸூத்ரார்த்தம் நமது ஸேச்வரமீமாம்ஸை முதலான நூல்களிற் காணலாம். ஏனெனில் வர் ணம் நித்யம்மென்றதாலே வர்ணராசியான வேதம் நித்யமாகாது. அப்படியாகில் உலகிலுள்ள காவ்ய நாடக புராணதிகளான எல்லா க்ரந்தங்களும் நித்ய மாய் விடும். அக்ஷரங்கள் நித்யமாளுலும் இப் பதத் திற்குப் பிறகு இந்தப் பதமென்று பதங்களை புருஷர் கள் தங்களுக்கு இஷ்டமான க்ரமத்தில் சேர்த்துச் சொல்வதாலே புதிய புதிய க்ரமத்திற்கிணங்க க்ரந் தங்கள் அநித்யமாகிறன என்ருல் இதுபோல் வேதத்திலும் புருஷமூலமாகவே பதக்ரமம் ஏற்பட வேண்டியிருப்பதால் வேதத்திற்கும் அநித்யத்வம் வரும். ஆகையால் வர்ணநித்யத்வம் வேதநித்யத்வ ஸாதகமாகாது. வர்ணங்கள் அநித்யமாயிருந் தாலும் நாம் கீழே கூறியவாறு வேதநித்யத்வம் ஸித்திக்கக்கூடுமாகையால் மீமாம்ஸகவ்யாக்யாதாக் கள் எதற்காக வர்ணநித்யத்வம் ஸ்த்தாபிப்பது?

மாகவுமாம் அவ்வதிகரணத்தின் ஶப்தார்த்தமும் தாத்பர்யமும் ஸேஶ்வரமீமாம்ஸையிலே விஶதமாகச் சொன்னோம்.

५ ஸம்ஸ்க்ருதபதங்கள் எல்லாம் அநாதியாக அர்த்தவிஶேஷங்களிலே அபாதிதநியதப்ரயோகங்களாய்ப் போராநிற்க லோகத்திலே சில ஶப்தங்கள் ஸாங்கேதிகங்களாகக் கண்ட

---

அது அபேக்ஷிதமன்றே. ஆக அநபேக்ஷிதவசநமென்கிற நிக்ரஹஸ்த்தானமாம் அல்லது பௌத்தர் முதலானோர் வர்ணங்கள் அநித்யமானால் வேதம் அநித்யமேயாகவேண்டுமே என்று கேட்டபோது உடனே அவர்களை யடக்குவதற்காக கம்பீரமாக வர்ணங்கள் நித்யங்களே என்று கூறி மறுத்தார்களென்ன வேண்டும் உட்கருத்து வேறென்னலாம்.

9 வினா—வேதம் அநாதி. வேதத்தினுள் இருக்கும் ஒவ்வொரு ஸம்ஸ்க்ருதசப்தமும் அநாதி என்கிறீர்கள். சப்தங்களுக்கு ப்ரயோகமென்பது கருதிய அர்த்தத்தைக் கூறுவதற்கிணங்க வெவ்வேறு க்ரமத்திலிருக்கும். வேதமும் அர்த்தங்களைக் கூறவே வந்தவை வாக்யத்திற்குப் பொருள் கூறுவது பதங்களின் பொருளை யறிந்த பிறகேயாம். இப்பதத்திற்கு இது பொருள் என்பதை யுணர்வது எவ்வாறு? घट என்ற சொல்லுக்குக் குடத்துடன் ஸம்பந்தம், पट என்பதற்கு ஆடையுடன் ஸம்பந்தம் என்கிற வ்யவஸ்த்தை எதனால்? சொல்லுக்கும் பொருளுக்கும் ஸம்பந்தம் ஒன்றும் காணவில்லை. சொல் முகத்திலுண்டாகிறது. பொருள் வெளியிலேயிருப்பது. அதனால் உலகில் பிறந்தவர்களைப் புதிது புதிதாகப்

அளவைக்கொண்டு மற்றுமுள்ள सर्व பதங்களும் सांकेतिकங்கள் என்று अनुमिப்பார்க்கு विपक्षबाधकமில் லாமையாலும் संस्कृतसर्वशब्दங்களுக்கும் संकेतयिता என்று ஒருவனை संप्रतिपन्नமாகக் காட்டவொண்ணுமை யாலும், सर्व लोक परिग्रह முண்டாம்படி अर्वाचीनரிலே ஒருவன் இப்படி संकेतिक்கைக்கு संभावனையில்லாமை யாலும், शक्यभावादिमूल अप्रंशादि प्रतिबन्दि अनुपप ர்ளுந

---

பெயர் வைத்து அழைக்குமிடத்திலே அச்சொற்களுக் கும் அவர்களுக்கும், பெயர் வைப்பவரின் ஸங்கேதமா கிற நோக்கமென்கிற இச்சை தவிர வேறு காரணம் தெரியாமலிருப்பதால் அவைபோல் எல்லா சப்தங் களுமே (ஸம்ஸ்க்ருதசப்தங்கள் உள்பட) ஒவ்வொரு காலத்தில் சிற் சில பெரியோர் செய்த ஸங்கேதத் தின் மேல் வழங்கப்படுகிறன என்று ஸங்கேத மூல மான ஸம்பந்தத்தையே ஊஹிக்கவேண்டும். எனவே அந்த ஸங்கேத காலத்திற்கு முன் அச்சொற்கள் இல்லையென்று சொல்லவேண்டியிருப்பதால் பதங் கள் அநாதியாகா. அதனால் வேதமும் அநாதியல்ல.

விடை—எல்லாச் சொற்களும் ஸங்கேத மூலம் பிறந்தவை, அவரவர் பெயர் போல என்ற அனுமா னத்தை மறுத்து, ஸங்கேதமின்றியே சொல்லாக லாம் என்று எதிர்ப்பக்ஷம் கூறினால் அந்த விபக்ஷத் திற்கு बाधகமாக அதாவது உங்கள் பக்ஷத்திற்கு அனுகூலமாக, தர்க்கம் என உளது, எல்லா ஸம்ஸ் க்ருதச் சொற்களுக்கும் ஸங்கேதம் செய்தவர் யார் என்னவாகும். பிற்காலத்தில் சிலர் செய்த ஸங்கேத

யாகையாலும், जगदादियिலே ईश्वरன் संकेतித்து இப்படி (ஸங்கேதித்தபடி) ப்ரதிஷ்டிதமான் என்கைக்கு (இற தற்கு) ஒரு ப்ரமாணமில்லாமையாலும் 'सर्वेषां तु स नामानि कर्माणि च पृथक् पृथक्। वेदशब्देभ्य एवादौ पृथक् संस्थाश्च

---

மென்றுல ஸாமான்ய ஜனங்களும எங்கும் அதனை பரிகர ஹிப்பது ஸாலபமன்று 'இதர பாஷையிலுள்ள சொறகளுக்கு மட்டும் ஸங்கேதம் யாருடையதாகச் சொல்லக்கூடும். அதனுல அவையும் அநாதியாகுமே' யென்னில்—ஸம்ஸ்கிருத சப்தங்கள் பேசி வரும்போது செவ்வையின்றி வாயில் வந்தபடிபேசினுர்கள் அதனின்று அபப்ரம்சங்களாக, சிதைவாகப் பல பாஷைகள் தோன்றின ஒரு गो சப்தம், गावी, गोणी என்றவாறு வெகுவாக மாறிற்றென்கிருர் மஹாபாஷ்யகாரர் அப்படி அபப்ரம்சமான சொற்களைக் கேட்கும்போது இல க்கணத்திற்கு இணங்கிய சொற்களை யறிந்தவர்கள் இச்சொல்லைச் சொல்லமாட்டாதே இவ்வாறு வேருகச் சொல்லுகிருனென்று தேறி, அர்த்தமில்லாத அப பரம்சத்திற்குக கருதிய அர்த்தத்தை நல்லசொற்கள் நினைவுக்கு வநததாலறிகின்றனராகையாலே அவற் றிற்கு ஒரு ஸங்கேதமும் வேண்டுவதில்லை, அபப்ரம்ச த்திற்கு மூலமான சப்தத்திற்கு எந்தக் காரணத் திஞல் அநதந்தப் பொருளில் ப்ரயோகமென்பதே ஆராயப்படவேண்டும், ஸ்ருஷ்டியின் தொடக்கத்தி லே சொல் கற்பிக்கும் ஈச்வரன் வைத்த ஸங்கேத மாகட்டுமே யென்னில், அவன் அதற்கு முன் கல்ப்ப த்தில் பேசினவண்ணம் பேசுவிக்கிருனென்பதை

निर्ममे ॥' என்றும், 'नाम रूपं च भूतानां कृत्यानां च प्रपञ्चनम् । वेदशब्देभ्य एवाऽऽदौ देवादीनां चकार सः ॥' என்றும் மநு பராசராதிகள் நித்யமான வேதத்திலுள்ள பதங்களையே ஜகத்காரணபுருஷன் யதாபூர்வம் ப்ரவர்த்திப்பிக்கிறானென்று சொல்லுகையாலும், இப்படிக்கு ச்ருதிதானும் உண்டாகை

---

விட்டு, புதிதாக வேறுவிதமாக ஸங்கேதம் செய்கிறானென்ற கற்பனை எதற்காக, பழைய சொற்களென்பதே ஸுலபமாய் கொள்ளக்கூடியது. மேலும் ப்ரமாணங்களும் முன் கல்ப்படியே சொற்கள் சொல்லப்படுகிறன என்பதை யறிவிக்கின்றன, "பிரமன் தேவமனுஷ்யாதி பிறவிகளுக்கும் ப்ராஹ்மணாதி வர்ணங்களுக்கும் பெயர்களையும் செயல்களையும் தனித்தனியாக வேதத்திற் காணும் சபதங்களினின்று கண்டுபிடித்துத் தகுந்த உருக்களையும் அமைத்தான்", "தேவாதி ப்ராணிகளுக்கு, தான், மனிதன் பிராம்ணன் க்ஷத்ரியன் மிருகம் பக்ஷி மரம் செடி என்றாற்போன்ற சொற்களையும் உருக்களையும் செயல்களையும் வேதசப்தங்களைக்கண்டு அதன் மூலம் பிரமன் செய்தான்" என்றனவே. இதனின்று முன் கல்பத்திய வேதம் பெற்றவுடன் அதிற கண்டபடி ஸ்ருஷ்டி செய்தானென்றால், இந்த வேதச்சொற்கள் போன கலப்பத்திலுமிருந்தவை என்பது தெளிவு. ஆகையால் ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் ஈச்வரன் ஸங்கேதம் செய்தானென்பதற்கில்லை மனுபராசரர்கள் சொன்னாரென்பது மட்டுமல்ல வேதமே स भूरिति व्याहरत्, भुवमसृजत. பூ என்ற சொல்லை ஓதினார்.

யாலும். संस्कृतसर्वपदங்கள் अनादिகளாகக் குறையில்லை.
10 இவை सांकेतिकங்களென்கிற वेदावलम्ब वैशेषि-

---

அதன் படி பூமியைப் படைத்தார் என்கிறது இவ்வளவால் ஸம்ஸ்கிருதத்தில் அந்தந்தச் சொல்லுக்கு அந்தந்தப் பொருளைக் கூறும் தன்மை இயற்கையானது முன்முன் வியவஹாரத்தைக் கொண்டு இதனையறிவதாம் வேறு ஸங்கேதாதிகள் வேண்டா என்றதாயிற்று ஆகையால் சொற்கள் அந்தந்தப் பொருளிலே அநாதியாகலாம்.

10 இப்படியிருக்க, தார்க்கிகர், सामयिकः शब्दादर्थप्रत्ययः என்றது சரியல்ல சொல்லுக்கு அந்தந்தப் பொருளைக்கூறும் சக்தியாவது ஸங்கேதமே (ஸமயமே). அதாவது ஈச்வர ஸங்கேதம் வேதசப்தங்கள் ஈச்வரனால் இயற்றப்பட்டவை; ஈச்வர ஸங்கேத மூலம் வழங்கப்படுகிறன என்றனர் அவர். இது பாஹ்யமதத்திற்கு அநுகூலமன்று. வேதம் அநித்யமானாலும் ப்ரமாணமாகுமென்று பாஹ்யமதத்தைப் புறக்கணிக்கவே ஸாதகமாகும் புருஷன் செய்யாமல் ப்ரபந்தம் உண்டாகுமா என்ற கேள்விக்கு ஈச்வரனென்ற புருஷன் செய்தானென்று இவர் பரிஹாரம் பணித்தனர். இதை நாமும் இசையலாம். ஆனாலும் வேதவாக்ய விரோதமிருப்பதால் நாம் இசைவதில்லை வைசேஷிக ஸூத்ரம் கீழே கூறியதை, सामयिकत्वाच्छब्दार्थप्रत्ययस्य என்று கௌதமரும் கூறினர். வேதாவலம்பிகளாய் வேதப்ராமாண்யத்தை ஸ்தாபிக்கும் தார்க்கிகராயிருந்தும் அவர் சொல்வது வேதமார்க்கத்தை விட்டு

விலகினதாகும். முன் கல்பத்து வேதச்சொற்களைக் கொண்டு உலகு படைக்கப்பட்டிருக்க, உலகைப் படைத்து அதில் வஸ்துக்களை வ்யவஹரிப்பதற்காக ஈச்வரன் சொற்களைச் செய்து ஸங்கேதம் செய்தா னென்பது வேதவிருத்தமன்றோ

நாம ரூபஞ்ச என்ற பராசர வாக்யம் கீழ் கூறினம் பதஞ்ஜலி என்ற மஹாபாஷ்யகாரரும், 'குயவன் வீடு சென்று குடம் செய்து கொடு என்பது போல் வையா கரணனின் வீட்டுக்கு வந்து சொல் செய்துகொடு என்று யார் கேட்கிறார்கள்? சாப்திகர்கள் சப்தங்களைச் செய்பவரல்ல. பாணினி இப்பொருளில் இச்சொல் என்று சொன்னால் அவர் அதற்கு ஸங்கேதம் செய்வ தாகாது சப்தமும் அதற்கு அநதப்பொருளைக் கூறுந் தன்மையும் இயற்கையானது' என்று கருதுகிறார்.

சிலர் ஸ்போடம் நித்யமென்று பாஷ்யத்திற்குக் கருத்துக் கூறியது தவறாகும் வர்ணஸமுதாயங் களான பதங்களே நித்யம். வியாகரணமானது பதங்களைச் செய்வதற்கு வந்ததன்று, பத³கரணமில்லை. பத³ஸம்ஸ்கரணம் அதனால் ஸம்ஸ்க்ருதமென்கிறோம். வ்ரீஹீந் ப்ரோக்ஷதி என்று நெல்லுக்கு ப்ரோக்ஷணத்தை விதித் தால் அந்த ப்ரோக்ஷணம் நெல்லைச் செய்வதன்று, நெல்லுக்கு ஸமஸ்கரணம் அதற்கு ஒரு சிறப்பை= சுத்தியை யளிக்கிறது. அதுபோல் வியாகரண ரீதி யில் சொல் அமைந்தால் அதற்கு அபப்⁴ரம்ஶமென்கிற தோஷமில்லை யென்றதாம் 'ந ம்லேச்சி²தவை, நாபபா⁴ஷிதவை'

वाक्यविरोधமும் வரும். இத்தாலே वेदवाक्यपौरुषेयत्व-प्रतिपादनமும் दत्तोत्तरம். वाक्यत्व-वेदत्वाद्यनुमानங்களுக்கு विपक्षेबाधकाभावादிகளையும் वेदनित्यत्वம் சொல்லுகிற श्रुति - स्मृतिवाक्यஙகளாலே बाधத்தையும் கண்டுகொள்வது. 'प्रतिमन्वन्तरं चैषा श्रुतिरन्या विधीयते' என்றது

---

अपशब्दங்களை ப்ரயோகிக்க லாகாதென்றன்றோ விதியிருப்பது ஆக நித்யமான சொல்லைக் காண்பதற்கே வியாகரணம்.

மனுவ்யாஸாதிகளும் அவ்வாறே சென்றனர். இதனால் வேதம் ஈச்வரனென்ற புருஷனால் செய்யப் பெற்றதென்று 'बुद्धिपूर्वा वाक्यकृतिर्वेदे' 'तत्प्रामाण्यमाप्तप्रामाण्यात्' என்று வைசேஷிகநையாயிகர்களின் நிர்ணயம் ந்யாயமாகாதெனக वेदம் आधुनிகரின் கரநதம் போல் பௌருஷேயம் வாக்யமாக அமைந்திருப்பதால் என்ற अन्वयानुमानமும், வேதம் ஸர்வஜ்ஞனால் செய்யப்பெற்றது வேதமாய் (மற்ற ப்ரபநதம் போலன்றி) விலக்ஷணமாயிருப்பதால், ஸர்வஜ்ஞன செய்யாமலிருந்தால் இவ்வாறிராதென்ற व्यतिरेकानुमानமும் பிசகாகும் विपक्षबाधकம் அதாவது தார்கிகர் ஸாதிப்பதை மறுததால் அதற்கு बाधकமாய் தங்களுக்கு அனுகூலமான தர்க்கம் கூறவியலாதே கேவலவ்யதிரேகியென்ற அநுமானமேகிடையாதெனறும் ஆளவநதார் முதல் பெரியோர் ஸ்த்தாபித்திருக்கினறனர் இப்படி ஓரே வேதம் எல்லா கல்ப்பங்களிலுமிருக்குமென்றால் ஒவ்வொரு மந்வந்தரத்திலும், (அதாவது பதினலு மந்வநதரங்கள் கொண்ட நீண்டகாலம் கல்ப்ப

तत्काल नियत-अनादिवेदप्रवर्तनपரம்

11 ऋषிகளுடைய सूक्तकाण्डमन्त्रकृत्ववचनமும் याज्ञवल्क्य-वेदवलृप्तिवचनமும், विश्वामित्रादिसंज्ञक-पूर्वपूर्वऋषिदृष्टवेद-

---

மெனப்படும். (அதன் ஒவ்வொரு பகுதியிலும்) வெவ்வேறு வேதம் விதிக்கப்படுகிறது = செய்யப்படுகிறதென்கிற வசனம் விரோதிக்குமே யென்னில் அதன் பொருள் வேறு ஒவ்வொரு வருஷமும் வஸந்தாதி காலம் மாறி மாறி வருவது போல் ஒவ்வொரு கல்பத்திலும் ஒவ்வொரு மந்வந்திரத்திலும் இந்த்ரன தேவதைகள் ரிஷிகள் போன்ற பலர் மாறுவதுண்டு அந்தந்த தேசகாலங்களுக்குத் தக்க வேதபாகங்கள் எல்லாம் அநாதி வேதத்திலடங்கியிருக்கிறன. அந்தந்த பாகத்திற்கு அவ்வப்போது ப்ரசாரம் விதிக்கப் படுகிறது. புதிதாக வேதம் எழுதுவதில்லையென்க

11 இனி ரிஷிகளே வேதங்களைச் செய்ததாகத்தெரிகிறதே. विश्वामित्रस्य सूक्तं भवति இத்யாதியால் ऋग्वेदத்திலுள்ள ஸூக்தங்களெல்லாம் பல ரிஷிகளால் செய்யப் பெற்றது ஸ்பஷ்டம். தைத்திரீயத்தில் காண்டங்களாகப் பிரித்து ப்ரஜாபதி அக்னி முதலானோர் காண்ட ரிஷிகளென்றார்கள். मन्त्रकृतो वृणीते என்று மந்த்ரம் பண்ணினவர்களை வரிக்கவேண்டுமென்றதால் மந்த்ரங்களெல்லாம் அநித்யமென்றதாம் சுக்ல யஜுர்வேதம் இயற்றியவர் யாஜ்ஞவல்க்யர் அவருக்கு முன் அந்த வேதமில்லையென்று எல்லோரும் இசைந்ததே அது போலெல்லாமென்னில்—இதற்கு உத்தரம் கேண்மின்.

**भाग**த்தை **अव्यय**ம் பண்ணுதிருக்கச்செய்தே **सुकृतविशेष-वश**த்தாலே கண்டு **प्रवर्ति**ப்பிக்கையைச் சொல்லுகிறது.

---

ஸர்வஜீவ ஸநாதந தர்மநூலான வேதம் கலப் பந்தோறும் அவசியமாகுமென்னும் யுக்தியையும் ஸ்பஷ்டமான வசனங்களையும் அனுஸரித்து, 'வேதம் உண்டான காலமொன்றில்லை அது சாச்வதம்' என்று தெரிந்த பிறகு கூழ்க்கூறிய ஆக்ஷேபங்களுக்கெல் லாம் தக்கவாறு ஸமாதானம் யோசிப்பதே தகும்; அவ்வாறே சொல்லியுமிருக்கிறார்கள். அதாவது— **विश्वामित्रस्य सूक्तं भवति** இத்யாதி வாக்யங்களுடன் நிலையாகச் சேர்ந்திருக்கும் வேதங்களை அடியிலே பகவான் தன் மகனை பிரமனுக்கு அனுப்ப, அவர் பெற்று இந்த பாகம் விச்வாமித்ரர்மூலம் ப்ரசாரமாக வேண்டும் ஸூக்தம், இந்த காண்டம் அக்னியாதி மூலம், இந்த மந்த்ரம் இன்னார் மூலம் ப்ரசாரமாவ தென்றெல்லாம் தெளிந்து அத்தகைய விச்வாமித் ராதிகளைப் படைத்து நீங்கள் தவப்பெருமையால் காணவேண்டுமென்று உபதேசிக்க அவர்கள் அவ் வாறு செய்து ப்ரசாரம் செய்கின்றனர். இப்படி இதற்கு முன் கல்பத்தில் விச்வாமித்ராதிகளால் இப்படி காணப்பெற்ற பாகங்களை இப்போதும் அப் பெயர் கொண்டவர் கண்டு ப்ரசாரம் செய்வதால், அவருடைய ஸூக்தம், அவருடைய காண்டம் அவர் மந்த்ரகர்த்தா என்றெல்லாம் வ்யவஹரிப்பதாம். மந்த்ர சாஸ்த்ரத்திலே புது மந்த்ரங்களை நிர்மாணம் செய்ய வழி கூறப்பெற்றுள்ளது. வேதத்திலுள்ள

மந்த்ரங்கள் நித்யங்களானாலும் புதிய மந்த்ரம் மேன்மை யுடையதாகச் செய்பவருக்கு என்ன ப்ர பாவமோ அது இவர்களுக்கும் இருப்பதாக நாம் கௌரவிக்க வேண்டுமென்பதற்காக, மந்த்ரத்ரஷ் டாக்கள் என்றுமே மந்த்ரகர்த்தர்களென்பதென்க.

12 இதனினறு மற்றொரு கேள்விக்கும் மறுமாற் றம் அறியப்பெறும்.-அதாவது-வேதம் எப்போதுமுள தாகில் அதில் எப்போதுமுள்ள வஸ்து தான சொல்ல வாகும். ஏதோ ஒரு சமயம் உண்டாகும் வஸ்துவை வேதம் சொல்லவியலாது. அவ்வாறாகில் அந்த வஸ்து உண்டான பிறகு தானே அதைப் பற்றி வேதம் பிறந்திருக்கும் எனவே அந்தந்த இடம் அறுதியாகாது ஆகையால் விச்வாமித்ராதி ரிஷிகளை யும் அவர்களின் க்ருதிகளையும் கூறும் வேதம் சாச்வத மாகுமா என்று கேள்வியாம் உத்தரமாவது-வேதத் தில், மனிதன் மாடு தானியம் மரம் செடியெல்லாம் சொல்வது தகுமா, தகாதா. அவை ஆகி அழியும் பொருளானாலும், ஒன்று போனாலும் அதைப்போன்ற மற்றொன்று பின்னே வந்த வண்ணமிருப்பதால் ப்ர வாஹ நித்யமெனப்படுமாகையால் குற்றமில்லை யெனில், அதுபோலவே விச்வாமித்ராதிகள் என்ற பெயரும் ப்ரதானமான செயலும் ஒரே விதமாயிருக் கும் பலர் மேன மேல் வந்த வண்ணமிருப்பதால் ப்ரவாஹ நித்யர்கள் வேதத்தில் இந்த்ர சந்த்ர ஸூர்யாதிகளைச் சொல்வதும் இதனால் கூடுமென்று

व्रीहि[यव]पश्वादिகளைப்போலே இந்த்ராதிகளும் प्रवाहनित्य ராகையாலே परिहृतம். काठकादिसमाख्याविशेषங்களும் இப்படி प्रवाहनित्यप्रवर्तकविशेषसबन्धनिबन्धनங்களாகையாலே पौरुषेय-त्वहेतुக்களன்று.

13 जगत्कारणपुरुषன் பக்கலிலே வேதங்கள் ஜநித்தன

---

தேறியதால் நித்யமான வேதத்திற்கு அநித்யார்த்த ஸம்யோகம் = அநித்யமான வஸ்துவைக் கூறுவதென்பது கூடாதென்ற கேள்வி யொழிந்தது. பூர்வமீமாம்ஸையிலும் இவ்விஷயம் விசாரித்திருக்கிறார்கள். ஆனால் அவர்கள் சொல்லும் ஸமாதானம் சிறிது வேறுபடும். அது வியாஸர் இசைந்ததன்று. விரிவு ப்ரஹ்மஸூத்ர வியாக்யானங்களில் தேவதாதிகரணத்திற் காண்க. இனி, காடகம், காலாபகம் என்றவாறு வேதபாகங்களுக்குப்பெயர் வழங்கப்படுகிறதே. கடர் கலாபர் போன்ற ரிஷி சொன்னதால் தானே அப்பெயரென்னில்—இதற்கும் இதே விடை. இப் பெயர் உள்ளவர்களே புந: புந: பிறந்து ப்ரசாரம் செய்கின்றனர். அந்தந்த பாகத்திற்கு ப்ரசாரம் தொடங்குகிறவர்களெல்லாரும் கடர் கலாபர் என்றவாறு வழங்கப்பெறுவர்.

13 ஆனாலும் 'ரிஷிகள் வேதமியற்றவேண்டா; தார்க்கிகர் கூறுமாறு ஸர்வேச்வரனே வேதம் நிர்மித்தானென்னலாமே. புருஷஸூக்தத்திலே அவனிடமிருந்து ரிக்வேதாதிகள் பிறந்தனவென்று சொல்லப்பட்டுளதே. छन्दांसि जज्ञिरे तस्मात् यजुस्तस्मादजायत என்ற जनिधातुவுக்குப் பிறவி தானே பொருள்

என்றதும் धात्वर्थமான प्रादुर्भावத்திலே तत्परம் இது ब्रह्मावுக்கு வேதங்களைக் கொடுத்தான் என்கிற வாக்யத்தாலே ஸுவ்யக்தம். இவ்வர்த்தம் "अनादिनिधना ह्येषा वागुत्सृष्टा स्वयम्भुवा । आदौ वेदमयी दिव्या यतस्सर्वाः प्रसूतयः" इत्यादि महर्षि-

என்னில்—வியாகரணத்தில் जनि-प्रादुर्भावे என்று அந்த தாதுவுக்கு ப்ராதுர்பாவம் பொருளென்றார். அதாவது தோற்றம். முன்னமே இருக்கும் வஸ்து காணப்படாமலிருந்து தோன்றுவதே ப்ராதுர்பாவம். அதனால் வேதம் உண்டாகவில்லையென்றே தெரிகிறது ஆடு மாடு குதிரை மனிதர் உலகம் எல்லாவற்றையுமே जनि தாது வாலதானே சொல்லியிருக்கிறது. அவையெல்லாம் நித்யமா என்னில். அவை அநித்யங்களென்று எல்லோரும் இசைந்திருப்பதால அங்கே அனுபவத்திற்கிணங்க சொற்பொருளை மாற்றிக்கொண்டாலும் வேதவிஷயத்தில் ஏன மாறறவேண்டும்? ஆடு மாடு முதலான த்ரவ்யங்களும் அநாதி. ஆகாரங்களுக்கே மாறுபாடு என்றும் அதன கருத்தாகலாம் வேதவிஷயமான ஜநி தாதுவுககு மட்டும் வியாகரணத்தில கூறிய முக்யார்த்தமே கொள்ளவேண்டுமென்று வேதமே காணபிக்கிறது சவேதாசவதரோபநிஷத்து பகவான பிரமனைப படைத்து அவனுககு வேதங்களை அளித்தானெனகிறது. 'வேதங்களையும் படைத்தான' என்று கூறவில்லை பாரதத்திலும், 'எந்த வேதத்தினின்று கண்டுபிடித்து ஸகல ப்ரஜாஸ்ருஷ்டிகளும் செய்யப்படுகின்றனவோ, திவ்யமாய வேத

वाक्यनिर्णीतம்.

14 द्वापरान्तங்களிலே व्यासप्रवाहमुखத்தாலே शाखा-भेदकरणமும் कालक्रमसकुचितप्रज्ञரான अधिकारिகளுக்கு ग्रहण सौकार्यार्थமான विभजनादिविषयமென்னுமிடம். 'तपसा ब्रह्म-

---

மென்கிற பெயருடையதாய் ஆதியும் (ஆரம்பமும்) निधनமும் (அழிவும்) இல்லாததுமான அந்த வாக்கானது ஸ்ருஷ்டியின் தொடக்கத்தில் பகவானல் ப்ரசுரிக்கப்பெற்றது என்ற வாக்யம் முதலான வற்றினின்றும் இது நிர்ணயிக்கப்பெறும்.

14 வியாஸர் வேதத்தை நாலாகவும் பல கிளை களாகவும் பிரித்து ப்ரசாரம் செய்தாரே. அதில் காண்வசாகை மாத்யந்திநசாகை என்றுற்போன்ற பல கிளைகளில் சிற்சில விடங்களில் பாடபேதம் காண்கிறதே. அவற்றில் ஒன்றுதானே உண்மை யான வேதமாயிருக்கும். பிற சாகைகள் பின்னே வந்தவை என்னவேண்டுமே என்றெல்லாம் சங்கிக் கலாகாது. ஒவ்வொரு சதுர்யுகத்திலும் த்வாபர யுகத்தின் முடிவில் ப்ரஜைகளுக்கு ப்ராண சக்தியாதி களின் குறைவைக் கண்டு ஒவ்வொருவரை வியாஸ ராக்கி அவர்மூலம் சாச்வதமான வேதமே பாகம் பாகமாகப் பிரிக்கப்படுகின்றது. அப் பாகங்களுக்குக் கிளைகள் (शाखा) என்று பெயர். மரத்திலே கிளைகள் பிரிப்பதற்கு முன்னும் அவ்வாறே யிருப்பனவே யல்லது சிற்சில பாகங்களைத் தச்சனைக்கொண்டு இழைத்துக் கிளையாக்குவதில்லை. ஆக அந்தந்தசாகை அங்கங்கே காணப்படும் பாடபேதத்துடனே அநாதி

चर्येण व्यस्य वेदं सनातनम् இத்யாதிகளிலே ப்ரஸித்தம்

15 ஓர் அளவுகளிலே सारस्वतपाठ संहितैकदेशसन्धाना(पठना)दि

---

யாயிருப்பனவேயாம். ஒவ்வொரு சாகைப்படி நடப்பவரும் எல்லா சாகைகளேயும் ஓதவல்லராய் கலிக்கு முன் இருந்தனர். கலியில் பிறகுத் தங்கள் வேதத்தோடு தாங்கள் நிற்கத் தொடங்கினரென்பதே விசேஷம். ப்ரஜ்ஞை ஸங்குசிதமாய் குறைவாயிருப்பவரே பெரும்பாலுமென்று க்ரஹண ஸௌகர்யார்த்தமாக—ஸுகமாய் க்ரஹிப்பதற்காக विभजनம் = பிரிவும் அதன்படி திட்டமாய் அத்யாபனமும். அதிக ப்ரஜ்ஞாதிகள் பெற்று ஒருவன் வியாஸரைப்போலே எல்லாம் அறிய முன்வருவானுகில் அவனுக்கு ஸ்வாகதமே = நல்வரவு கூறுவதாம். வியாஸர் என்கிற சொல்லுக்கு 'பிரித்தவர்' என்றே பொருள். தவத்தினுலும் ப்ரஹ்மசர்யமென்ற வேதபரிசயவைபவத்தாலும் ஸநாதநமாயிருந்த வேதத்தை வகுத்து'' என்றே ஸ்ம்ருதியிலுள்ளது.

15 ஆனுலும் தைத்திரீயத்தில் புதியதாக ஸாரஸ்வத பாடம் புகுந்திருக்கிறதே; அது அநாதியாமோ வென்ன அருளிச்செய்கிறுர் ஓரித்யாதி. எல்லா வேதங்களிலும் ஸம்ஹிதை என்ற மந்த்ர பாகம் வேறு, ब्राह्मणभागம் வேறு என்றே யிருக்க இதிலே ஸம்ஹிதையின் ஏகதேசங்களிலே ப்ராஹ்மணா भागங்களுக்கும் ஸந்தானம் = இணைப்பு காண்கிறதே; இது பின்னுல் வந்த கலப்புதானே, விஷ்ணு புராணத்தில் வைசம்பாயனரிடம் ஓதின வேத

களி(ளா)லே வரும் स्वल्पक्रमवैषम्यमात्रம் प्रामाण्यविरोधि

---

பாகத்தை கோபம் கொண்ட குருவின் ஆஜ்ஞைக்கு இணங்கி யாஜ்ஞவல்க்யர் தம்முடைய உடலில் மூளையில் வைத்திருந்ததை மாம்ஸமாகக் கக்கிய போது மற்ற சிஷ்யர்கள் தித்திரி பக்ஷியுருக்களைக் கொண்டு அந்த மாம்ஸரூபமான வேதத்தைப் பரபரப்புடன் கண்டபடி உட்கொண்டார்கள். அதனால் மந்த்ர ப்ராஹ்மணக் கலப்பென்பர். மந்த்ரமாவது கார்யங்களை யனுஷ்டிக்கும் போது சொல்ல வேண்டும் வேதாம்சம். ப்ராஹ்மணமாவது செய்ய வேண்டிய கர்மாக்களை விதிப்பதும், இந்த மந்த்ரம் இந்தக் கார்யத்திற்கு என்று விநியோகப்பதுமான பாகம். இக் கலப்பு அவர்கள் பக்ஷிகளாய் உட்கொண்டபோதாயிற்றென்று அறுதியிடமுடியாது. முன்னம் ஓதினவரே கண்டு உண்டதால் முன்னிருந்த முறை மாறாமல் கவனித்தே யுட்கொள்ளலாமே. ஆனாலும் அதற்கு முன்னாவது இக்கலப்பு புகுந்திருக்கவேண்டும். உண்மையில் வைசம்பாயனர், पैङ्गियास्कர், तित्तिरि. उखர், आत्रेयர் என்று குருசிஷ்ய க்ரமமும் தெரிவதால் तित्तिरि என்று ஒரு ரிஷியின் பெயராகும். ஸாரஸ்வத பாடத்தில் பதங்களை ஐம்பது ஐம்பதாகப் பிரித்து பஞ்சாசத் என்று வ்யவஹரித்து ஓதுகின்றனர். ஐம்பதின் முடிவானது, ऋक्, यजुஸ்ஸு இதில் நடுநடுவேயுமிருக்கலாம், क्रियापदத்தில் उपसர்கத்திலே ஒரு பஞ்சாசத்தை முடித்து க்ரியா பதத்தை மேலே சேர்க்கிறார்கள். துளிகூட அர்த்தத்

திற்கு ஸம்பந்தமிராமல் சொற்கணக்குமட்டுங் கொண்ட பிரிவு இது. பிரிக்கும் போது ஸ்வரங்கள் மாறுமே அப்போது பண்டைவேதமாகுமா. उपसत् என்ற ஹோமங்கள் மூன்று உண்டு. அதற்கு மந்த்ரம் या ते अग्ने என்றது. அதனிடையில் ஒன்றில் अयाशया என்றும், 2ல் रजाशया என்றும், 3ல் हराशया என்றும் भेदமிருக்கிறது, இப்படி பிரித்து ஓதவேண்டியிருக்க, याते अग्ने-ऽयाशया रजाशया हराशया तनूर्वर्षिष्ठा என்றவாறு மூன்றையும் சேர்த்து ஓதுகிறதே, இப்போது மந்த்ரக்ரமம் மாறிவிடாதா. தைத்திரீயத்தை प्राजापत्यம் सौम्यம், आग्नेयம் वैश्वदेवம் स्वायम्भुवம் என்று ஐந்து காண்டமாக ஐந்து ரிஷிகள் கண்டதாகப் பழைய பிரிவு. அத்தை ஓதுவதற்கு वेदव्रतங்கள் என்னப்பட்ட ஐந்து வ்ரதங்கள் होतृव्रतமித்யாதிகள் உள. அந்தந்த வ்ரதம் அனுஷ்டித்து அந்தந்த காண்டத்தை ஓதி முடிப்பது முறை. இந்த ஸாரஸ்வத பாடத்தில் ஏழு காண்டமாகப் பிரித்திருப்பதில் அந்த ஐந்து காண்டங்கள் வரிசையாக இராமல் நடுநடுவே பாகம் பாகமாகப் பிரிந்திருக்கின்றன. बोधायनीयगृह्यத்தில் काण्डानुक्रमणिकैயில் पौरोडाशिकம் இத்யாதியால், எந்த பாகம் ப்ராஜாபத்யாதி காண்டத்தில் எதில் சேருமென்று வகுத்துக் கூறப்பெற்றுள்ளது. இப்படி கலந்துவிட்டதால் ஸாரஸ்வத பாடக்ரமமாக இப்போது நடக்கும் அத்யயனத்தில் வேதவ்ரதங்களைத் தனித்தனியே பண்ணவியலாமல் எல்லாம் சேர்த்தே செய்து விடு